For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60 · திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் · ஏப்ரல் 2022 · இதழ் 23



## மிஷன் கட்டிடங்கள் பேசும் வரலாறு



கர்த்தர் தமது ஜனத்திற்கு பெலன் கொடுப்பார் - சங் 29:11
EXCEL
Fitness Equipment
Importers & Exporters
Orbitreck Deluxe
Magnetic Orbitreck
Foot Massager
Leg Massager
Mercury Pro Massager Chair
Ecco Plus Treadmill
Marvel Plus Treadmill
A1500 Treadmill
Muscle Fit
Gym Equipment
Manufacturers & Exporters
MAKE IN INDIA
PROMAXFit
Ab Core
Smith Machine
Hack Squat
Curve Treadmill Commercial
Sissy Squat
Cable Crossover
Peck Rear Delt
Plate Load Chest Press
M : 9488 00 5454
W : www.excelfitindia.com
CHENNAI - TRICHY - DINDIGUL - MADURAI - PASUMALAI - RAMNAD - RAJAPALAYAM - TENKASI - TIRUNELVELI - TUTICORIN - NAGERCOIL
FACTORY : No.4, Reddiyarpatti Road, Near Govt. Engg. College, TIRUNELVELI - 7.



# ஆசிரியர் சுவடு

**கிறிஸ்துவுக்குள் மிகவும் அன்பானவர்களே,**

இறை மைந்தனாம் இயேசுவின் இனிய நாமத்தில் வாழ்த்துக்கள். கர்த்தருடைய பெரிதான கிருபையினாலே திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் நல்ல வளர்ச்சியினைக் கண்டு வருகின்றது. ஒவ்வொரு மாதமும் புதிய புதிய அறிமுகங்களைப் பெறுகின்றோம். வாசகர்கள் தருகின்ற உற்சாகமும், ஆலோசனைகளும் இன்னும் புது வேகத்தோடு கூட நம் சங்கத்தினை முன் நடத்திச் செல்ல உதவுகின்றது. கடந்த மாதத்திலே திருநெல்வேலி கிறிஸ்தவ நண்பர்கள் வட்டத்தோடு நம்முடைய சங்கமும் இணைத்து எழுத்தாளர் நிவேதிதா லூயிஸ் அவர்கள் எழுதிய அறியப்படாத கிறிஸ்தவம் என்ற நூலின் வெளியீட்டு விழாவினை நடத்த கர்த்தர் உதவினார். அநேக எழுத்தாளர்களும், நண்பர்களும் கலந்துக் கொண்டு விழாவினைச் சிறப்பித்தார்கள். அருள்திரு. கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் எழுதின புத்தகங்களை ஒவ்வொரு மாதம் ஒன்று என்ற கணக்கிலே நாம் வெளியிட்டு வருகின்றோம். கடந்த மாதத்திலே மறையவிருந்த மாணிக்க கற்கள் என்ற புத்தகத்தின் முதல் பாகத்தை வெளியிட்டோம். இம்மாதத்திலே திருநெல்வேலியின் முதலாம் இரத்தச் சாட்சி தாவீது சுந்தரானந்தம் அவர்கள் வாழ்க்கை வரலாற்றை வெளியிடுவதற்கான பணிகள் நடைபெற்று வருகின்றது. கர்த்தருக்குச் சித்தமானால் வடநெல்லை அப்போஸ்தலன் கனம் ராக்லாந்து ஐயரவர்களின் வாழ்க்கை வரலாற்றினை வெளியிட ஆயத்தமாகிக் கொண்டிருக்கின்றோம். அதற்கான தேவைகள் சந்திக்கப்பட ஜெபித்துக் கொள்ளுங்கள்.

இம்மாதம் வரலாற்று சுவடுகள் பத்திரிக்கை, **‘மிஷன் கட்டிடங்கள் சொல்லும் வரலாற்றுக் கதை‘** என்ற கருப்பொருளின் அடிப்படையில் தொகுக்கப்பட்டிருக்கின்றது. அக்காலத்தில் மிஷனெரிகளின் தியாகத்தினால் உருவான கட்டிடங்கள் இன்று பராமரிக்கப்படாமல் கிடப்பதற்கு காரணம், அதின் வரலாற்றையும் அதற்கு பின்னால் இருக்கும் தியாகங்களையும் மக்கள் அறியாமல் இருப்பதுதான். எனவே இம்மாதம் இம்முயற்சியினை இப்புத்தகத்தின் வாயிலாக நாம் எடுத்துள்ளோம். வாசித்து பயன்பெற அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

வருகின்ற மாதத்தின் தலைப்பாக **‘மிஷனெரிகள் சந்தித்த பிரச்சனைகளும் எதிர்கொண்ட சவால்களும்’** என்ற தலைப்பு தெரிவு செய்யப்பட்டிருக்கின்றது. வாசகர்கள் தங்கள் பகுதியில் மிஷனெரிகள் சந்தித்த பிரச்சனைகளையும், சவால்களையும் நம் கால மக்களும் எதிர்கால சந்ததிகளும் அறிந்துக் கொள்ளும் வகையிலே தங்கள் எழுத்தினை அனுப்ப அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன். தொடந்து நம் சங்கத்தின் மூலம் அநேக காரியங்கள் செய்யப்படவும், வரலாறுகளை உலகறியச் செய்ய உதவ கேட்டுக் கொள்ளுகின்றேன்.


**சுஜித் ரெக்ஸ்**
வடிவமைப்பு
75388 12218

**மன்னா செல்வகுமார்**
பதிப்பாசிரியர்
91767 80001

மன்னா செல்வகுமார்
பதிப்பாசிரியர்
christianhistorical@gmail.com

## மிஷன் கட்டிடங்கள் சொல்லும்

# வரலாற்றுக் கதை



*அருள்திரு ஜான் சாமுவேல்,*

பண்டாரசெட்டிவிளை

இயேசு கிறிஸ்துவின் கட்டளையை ஏற்றுக்கொண்ட மிஷனெரிகள், தங்கள் வாழ்வை தாங்கள் அழைக்கப்பட்ட தேசத்தின் மக்களுக்காகவே செலவழித்தார்கள். தங்கள் கலாச்சாரத்திற்கும், தங்களின் பழக்க வழக்கங்களுக்கும் சற்றும் சம்பந்தம் இல்லாதபொழுதிலும் கூட, தாங்கள் பணி செய்ய அழைக்கப்பட்ட இடத்தின் கலாச்சாரத்தினையும், பழக்க வழக்கங்களையும் தனதாக்கிக் கொண்டார்கள். மிஷனெரிகள் பணி செய்த காலத்தில் தங்களுக்குகென்ற சிறந்த வசிப்பிடத்தினை அமைத்துக் கொண்டார்கள். மேலை நாட்டின் கட்டிடக் கலை கலந்திருந்தாலும் கூட, நம் தேசத்தில் கிடைத்த பொருட்களைக் கொண்டே அவைகளைக் கட்டினார்கள். அநேக கட்டிடங்கள் நம் அலட்சியப் போக்கினாலும், கவனக்குறைவினாலும் சீரழிந்து போய் விட்டன. எனினும் இன்னும் சில மிஷனெரிகளின் இல்லங்களும் அவர்கள் கட்டின கட்டிடங்களும் அடையாளங்களாக இருக்கின்றன. இன்றைக்கும் மிஷன் பங்களாக்களைப் பார்க்கும் போது, மிஷனெரிகளின் அர்ப்பணிப்பினை உணர முடிகின்றது.

**கனம் பெஸ்ட் ஐயரவர்களின் மிஷன் பங்களா**

ஜேம்ஸ் கெர்ஷா பெஸ்ட் ஐயரவர்கள் இங்கிலாந்தில் 1811 ம் வருடம் ஆகஸ்டு மாதம் 22 ம் தேதி பிறந்தார். இயேசுவின் அன்பை சிறுவயதில் அறிந்து இரட்சிக்கப்பட்டு தன்னை முழுமையாக கிறிஸ்துவின் பணியை செய்யும் ஊழியராக அர்ப்பணித்தார். அர்ப்பணிப்பின் விளைவாக 1842ம் வருடம் இந்தியாவிற்கு ஆங்கிலத் திருச்சபையின் மிஷனெரியாக வந்து சேர்ந்தார். ஸ்பென்ஷர் அத்தியட்சர் அவர்களால் உதவிகுரு அருட்பொழிவு பெற்றபின் மதுரையில் பணியாற்றினார். பின்னர் 1844ம் வருடம் ஜனவரி மாதம் 3ம் தேதி கிறிஸ்தியாநகரம் வந்தடைந்தார். கிறிஸ்தியாநகரம் வந்தடைந்த கனம் பெஸ்ட் ஐயரவர்களுக்கு பெரும் அதிர்ச்சியே காத்திருந்தது. கிறிஸ்தியாநகரத்தில் ஒரு சில கிறிஸ்தவர்கள் மட்டுமே இருந்தார்கள். அம்மக்களுக்கும் ஆண்டவரை ஆராதிப்பதற்கு ஏற்ற ஒரு நிரந்தரமான ஆலயமும் இல்லாதிருந்தது. மிஷனெரி தங்குவதற்கான இல்லம் மிக சிறியதாக பனையோலைகளினால் வேயப்பட்டு காணப்பட்டது. பள்ளிக்கூட கட்டிடங்கள் ஏதும் இல்லை. இவ்வசதிக் குறைவுகளுக்கு காரணம் 1843 ம் ஆண்டில் தான் கிறிஸ்தியாநகரம் மற்றும் அதனோடு சேர்ந்து ஏழு சபைகளும் இணைக்கப்பட்டு ஒரு மிஷன் மையமாக மாறினது. அதுவரை கிறிஸ்தியாநகரம் முதலூரோடு கூட இணைக்கப்பட்டிருந்தபடியினால், அங்கிருந்த மிஷனெரிகள் எப்பொழுதாவதுதான், கிறிஸ்தியாநகரம் வந்து மக்களை சந்திப்பார்கள். எனவே அவர்களுக்கென்று ஒரு நிரந்தர குடியிருப்பு அமைக்க வேண்டியது அவசியமில்லாதிருந்தது.

எந்தவித அடிப்படை கட்டுமான வசதிகளும் இல்லாத இடத்தில் குடும்பத்தோடு தங்கி ஊழியம் செய்வது பெரும் சவாலாகவே இருந்தது. கிறிஸ்தியாநகரத்தை தலைசிறந்த பணித்தளமாக மாற்ற வேண்டுமென்று கருதி, அடிப்படை வசதிகளை உண்டாக்குவதென்று முடிவு செய்தார். அதின் விளைவாக மிஷனுக்கென்று 1844 ம் ஆண்டு நிலங்களை வாங்க ஆரம்பித்தார். 1845 ம் ஆண்டு மதுரை மற்றும் திருநெல்வேலி பகுதிக்கு மிஷன் பிரயாணமாக வந்த சென்னை பேராயர் ஜார்ஜ் டிரவர் ஸ்பென்ஸர் என்பவர், தான் 1841 ம் ஆண்டு கண்ட கிறிஸ்தியாநகரத்திற்கும், தற்போது அவர் கண்ட கிறிஸ்தியாநகரத்திற்கும் பெரும் வித்தியாசம் இருப்பதாக எழுதுகின்றார். 1841 ம் ஆண்டு அவர் கிறிஸ்தியாநகரத்திற்கு வந்த

போது ஆலயம் இல்லாதிருந்தது. ஒரு சில மக்களுக்கு அங்கிருந்த ஆலமரத்தின் அடியில் வைத்து கிறிஸ்துவின் அன்பினை எடுத்துரைத்திருக்கின்றார். ஆனால் 1845 ம் ஆண்டு ஆலய தெரு ஒன்று உருவானது என்று எழுதுகின்றார். சிறிய காலத்திற்குள்ளாக கனம் பெஸ்ட் ஐயரவர்கள் கிறிஸ்தியாநகரத்தின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டிருக்கின்றார்கள். எனினும் நிரந்தரமான ஆலயம் ஒன்றினை மக்களுக்கு உருவாக்கிக் கொடுக்கும் பொருட்டு சென்னை பேராயர் அவர்களைக் கொண்டே 1845 ம் ஆண்டு செப்டம்பர் 17ம் தேதி ஆலயத்திற்கு அஸ்திபாரம் போட்டார்.

நான்கு ஆண்டுகள் கழித்து 1849 ம் ஆண்டு ஜனவரி மாதம் 25ம் தேதி கிறிஸ்தியாநகரத்தின் தூய மாற்கு ஆலயம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஆலயம் பிரதிஷ்டை செய்யப்பட்ட அன்றுதான் கனம் பெஸ்ட் ஐயரவர்கள் தங்கி ஊழியம் செய்வதற்காக கட்டப்பட்ட மிஷன் பங்களாவும் பிரதிஷ்டை செய்யப்பட்டதாக கூறுப்படுகின்றது. ஆலயம், மிஷன் பங்களா ஆகியவற்றோடு கூட மாணவர்கள் தங்கி படிக்கும் இரண்டு விடுதி, ஆண் மற்றும் பெண் பிள்ளைகளுக்கு தனித்தனியே இரண்டு பள்ளிக்கூட கட்டிடங்கள் மற்றும் பெரிய ஆலயத்தில் ஆராதனைகள் இல்லாத நேரத்தில் கிராம மக்கள் காலை மற்றும் மாலை ஆராதனைகளுக்கு கூடுவதற்கென்று ஒரு சிற்றாலயம் போன்றவைகள் கட்டி பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றது. 1851ம் ஆண்டு கனம் பெஸ்ட் ஐயரவர்கள் SPCK ஊழிய நிறுவனத்திற்கு எழுதிய அறிக்கையில் தான் கட்டி பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆலயம் மற்றும் அதின் அருகில் அமைந்திருந்த மிஷன் பங்களாவினையும் இணைந்து படமாக வரைந்து அனுப்பியிருக்கின்றார். தற்சமயம் இந்த மிஷன் பங்களாவானது கிறிஸ்தியாநகரம் ஆண்கள் மேல்நிலைப்பள்ளி வளாகத்தில் மிகக் கம்பீரமாக நிற்கின்றது. இன்று இப்பங்களாவானது இருபால் ஆசிரியர்களின் அறைகளாகவும், ஆசிரியர்கள் கூடுகைக்காக கூடும் அரங்காகவும் பயன்படுத்தப்படுகின்றது. 174 ஆண்டுகளைக் கடந்தும் இன்று கிறிஸ்தியாநகர மிஷன் மற்றும் கனம் பெஸ்ட் ஐயரவர்களின் நினைவலைகளில் சுமந்து நிற்கின்றது.

**கனம் மார்காஷியஸ் ஐயரவர்கள் பங்களா**

கனம் மார்காஷியஸ் ஐயரவர்கள் 1852 ம் ஆண்டு டிசம்பர் மாதம் 24ம் தேதி அன்று இங்கிலாந்து நாட்டில் செஷயா வட்டத்திலுள்ள லெமிங்ற்றன் என்ற இடத்தில் பிறந்தார். கிறிஸ்தவ பக்தி மிகுந்த குடும்பத்தில் எட்டாவது மகனாக பிறந்தார். வீட்டில் கடைசி பிள்ளையாக பிறந்த இவருக்கு ஆர்தர் என்றும் பெயரை சூட்டினார்கள். மார்காஷியஸ் என்னும் அவருடைய குடும்ப பெயரோடு சேர்ந்து ஆர்தர் மார்காஷியஸ் என்று அழைக்கப்பட்டார். பதினொரு வயதுவரை வீட்டிலிருந்தே கல்வி கற்ற ஆர்தர் லாங்டென்டேல் மல்ட்ரம் இலக்கியப் பள்ளியிலும் அதன் பின்னர் கௌலியிருந்த இலக்கியப் பள்ளியிலும் பள்ளிபடிப்பை பெற்றார். அதன் பின்னர் தன்னுடைய கல்லூரி படிப்பினை வார்மின்ஸற்றர் மிஷன் கல்லூரியில் தொடர்ந்தார். அடிக்கடி ஏற்பட்ட பலவீனத்தின் காரணமாக தன்னுடைய பதினெட்டாவது வயதில் தன்னை மிஷனெரி ஊழியத்திற்கென்று ஒப்புக் கொடுத்தார்.

வெளிநாட்டிற்கு சென்று தன்னுடைய மிஷனெரி ஊழியத்தினை செய்ய விருப்பப்பட்ட ஆர்தருக்கு அவரது பலவீனம் பெரும் தடையாக இருக்குமோ என்ற அச்சம் நிலவியது. எனினும் தன் அர்ப்பணிப்பையும், அதற்கேற்ற ஆயத்தத்தையும் தொடர ஆரம்பித்தார். இறையியல் கற்க வேண்டுமென்ற விருப்பத்தில் பரிசுத்த அகஸ்ற்றின் இறையியல் கல்லூரியில் சேர்ந்து தன் இறையியல் படிப்பினைத் தொடர்ந்தார். அதன் பின்னர் மக்களுக்கு தன்னுடைய பணி பயனுள்ளதாக இருக்க வேண்டுமென்று எண்ணி தன்னை ஒரு மருத்துவராக்க விரும்பம் கொண்டு லண்டனிலிருந்த பரி. ஜியார்ஜ் மருத்துவ கல்லூரியில் மருத்துவ மாணவராக சேர்ந்தார். அதன் பின் அங்கிருந்த அரசு ரண வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து படித்தார். இன்னும் ஓர் ஆண்டு படித்து தேர்வு எழுதினால் போதும் ஒரு சிறந்த மருத்துவராக முடியும் என்ற நிலையில், ஒரு நாள் கால்டுவெல் ஐயரவர்களின் பிரசங்கத்தைக் கேட்டு தன்னை இந்திய தேசத்திற்கு மிஷனெரியாக அர்ப்பணித்தார். ஓர் ஆண்டு மருத்துவ படிப்பினை முடித்து மருத்துவராக மிஷனெரி ஊழியத்தினைச் செய்ய எவ்வளவோ குடும்பத்தார் எடுத்துக் கூறின போதும் கூட தன் முடிவில் மாறாது 1875ம் ஆண்டு சென்னை வந்தடைந்தார் ஆர்தர்.

1875ம் ஆண்டு இந்திய தேசம் வந்தடைந்த ஆர்தரை தமிழ் மொழி கற்று கொள்ளும்படியாக கனம் கால்டுவெல் ஐயரவர்களிடத்திலே அனுப்பப்பட்டார். அதன் பின்னர் 1876ம் ஆண்டு நாசரேத்தின் முதல் மிஷனெரியாக ஊழியத்தினை ஆரம்பித்தார் ஆர்தர் அவர்கள். குருப்பட்டம் பெறுவதற்கு தக்க வயது வந்தபடியினால், 1877ம் ஆண்டு உதவி குருப்பட்டமும், 1880ம்



ஆண்டு குரு அருட்பொழிவு பெற்று முழு நேர ஊழியராக தன் மிஷனெரி ஊழியத்தினைத் தொடர்ந்தார்.

கனம் ஆர்தர் மார்காஷியஸ் அவர்கள் ஊழியம் செய்த காலம் மிக கடினமான காலமாகவே இருந்தது. காலரா என்னும் கொடிய வியாதியினால் மக்கள் கொத்து கொத்தாக மடிந்து போயினர். அநேக பிள்ளைகள் தாய் தந்தை இல்லாத பிள்ளைகளாக ஆதரவு அற்றவர்களானார்கள். ஆதரவற்ற பிள்ளைகளை வளர்ப்பதற்காக அநாதை இல்லம் ஒன்றினை ஏற்படுத்தினார். அங்கு தங்கியிருந்த பிள்ளைகள் கைத்தொழில் கற்று கொள்ளுவதற்காக கைத்தொழில் பாடசாலையை 1878ம் ஆண்டு ஏற்படுத்தினார். தன்னுடைய ஊழியத்தினை விரிவுப்படுத்தி இறையியல் கல்லூரி, ஆண் பெண் இருபாலருக்கான பள்ளிக்கூடங்கள் என்று கல்வி அறிவினை மக்களுக்குக் கொடுத்தார். நாசரேத்தின் கட்டமைப்பிற்கு பெரும்பங்காற்றினார்கள்.

கனம் ஆர்தர் மார்காஷிஸ் அவர்கள் தங்கியிருந்து பணியாற்றின மிஷன் பங்களா இன்று மார்காஷியஸ் மேல் நிலைப் பள்ளி வளாகத்தில் உள்ளது. பல ஆண்டுகளானாலும் இன்னும் உறுதியுடன் காணப்படுகின்றது. சில காலங்கள் கனம் மார்காஷியஸ் ஐயரவர்கள் வாழ்ந்த வீடு, பள்ளியில் பயின்ற மாணவர்களுக்கு விடுதியாக இருந்தது. அவ்விடுதியை பங்களா விடுதி என்றே அழைப்பார்கள். பெரிய இரு புளிய மரங்கள் அவ்வீட்டிற்கு முன்னதாக இருக்கும். பெரிய ஜன்னல்களும், உயரமான கூரையும், அகன்ற கதவுகளும் கொண்ட நல்ல இடமாக அமைத்து தன் ஊழியத்தினை நிறைவேற்றினார். இன்றும் அக்கட்டிடத்தினை பார்க்கும் பொழுதெல்லாம், மார்காஷியஸ் ஐயரவர்கள் நாசத்தின் வளர்ச்சிக்காகவும், மக்களின் கல்வி முன்னேற்றத்திற்காகவும் ஆற்றிய பணிகள் கண்முன் தோன்றும்.

**இறையியல் கலாசாலைக் கட்டிடம்**

நாசரேத் நகரத்தில் ஸ்ட்ராஹன் ஐயரவர்கள் ஆரம்பித்த மருத்துவ ஊழியம் மிக பிரசித்துப் பெற்றது. ஸ்ட்ராஹன் ஐயரவர்களின் காலத்திற்குப் பின்னர் கனம் மார்காஷியஸ் ஐயரவர்கள் மிகச் சிறப்புற மருத்துவ ஊழியத்தினை நிறைவேற்றினார்கள். தற்காலத்தில் தூய லூக்கா மருத்துவமனை வளாகத்தில் ரோட்டின் ஓரத்தில் ஒரு பழைமையான கட்டிடம் ஒன்றினை காண முடியும். கட்டிடத்தின் தோற்றத்தைப் பார்க்கும் போது ஒரு சிற்றாலயத்தின் அமைப்பினை கொண்டதாக இருக்கும். அது மார்காஷியஸ் ஐயரவர்களின் காலத்தில் ஒரு சிற்றாலயமாகவே இருந்தது.



SAWYERPURAM SEMINARY.

அக்கால திருநெல்வேலி மிஷனில் பல மிஷனெரிகள் தங்கள் கல்விப்பணியினை மிகச் சிறப்பாக செய்து கொண்டிருந்தார்கள். ஆங்காங்கே பள்ளிக்கூடங்களை அமைத்து சிறந்த கல்வியினைக் கொடுத்து வந்தார்கள். அம்மாணவர்களுக்கு உயர்தரக் கல்வியினைக் கொடுக்க திட்டமிட்ட கனம் மார்காஷியஸ் அவர்கள், இளைஞர்களை ஊழியத்தின் பாதையிலும் வளர்க்கத் திட்டமிட்டார்கள். அக்காலத்தில் உடனடியாக வேத சாஸ்திரக் கலாசாலைக்கு தேவையான கட்டிடங்கள் இல்லாத பட்சத்தில் 1910ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 16ம் தேதி அன்று லூக்கா மருத்துவனையில் ஒரு பகுதி ஒதுக்கப்பட்டது. அப்பொழுது மருத்துவமனையில் பேறுகால சிகிச்சைக்குப் பயன்படுத்தப்பட்ட அறை வேத சாஸ்திரக் கலாசாலைக்கென்று ஒதுக்கப்பட்டது. ஊழியத்திற்கென்று தங்களை அர்பணித்த மாணவர்களுக்கு தனியே ஆலயம் ஒன்று தேவையென்று உணர்ந்த கனம் மார்காஷியஸ் அவர்கள், கலாசாலைக்கு ஒதுக்கப்பட்ட கட்டிடத்தின் மேல் பகுதியை சிற்றாலயமாக்க திட்டம் தீட்டினார்கள். கட்டிடப்பணிகள் வெகு வேகமாக முடிக்கப்பட்டு, 1913ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 6ம் தேதி, கிறிஸ்து மறுரூபமான திருநாள் அன்று, மறுரூப ஆலயம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சிறிதுகாலம் இங்கிருந்து செயலாற்றிய வேத சாஸ்திரக் கலாசாலை நல்ல வளர்ச்சி காணவே, அது நாசரேத்தின் திருமறையூர் என்ற இடத்திற்கு மாறுதலாகி சென்றது. மார்காஷியஸ் ஐயரவர்கள் கட்டிய அந்த சிற்றாயலம் இன்றும் நாசரேத்தில் அமைந்திருந்த இறையியல் கல்லூரியினை ஞாபகப்படுத்துகின்றது.

மிஷனெரிகள் ஊழியம் செய்த இடத்தில் கட்டியெழுப்பின கட்டிடங்களின் வரலாற்றினை தொகுத்தால் ஒரு தனி புத்தகமாகவே அது அமையும் என்பதில் சந்தேகமில்லை. அவர்கள் விட்டு சென்ற பணியை மிஞ்சும் அளவிற்கு ஊழியங்கள் நடைபெறவில்லையென்றாலும் கூட அவர்கள் விட்டுச்சென்ற பணியினை தொடர்ந்து செய்வதும், அவர்கள் நமக்குக் கொடுத்த கட்டிடங்களைப் பாதுக்காப்பதும், பராமரிப்பதும் நம் கடமையாக இருக்கின்றது. ஆனால் இன்று மிஷன் கட்டிடங்களை நாம் காணும் போது நம் மனது வலிக்கும் அளவிற்கு அதின் பராமரிப்புகள் இருக்கின்றது. இரு நூறு ஆண்டுகளானாலும் அசையாமல் இருக்கும் அக்கட்டிடங்களின் அஸ்திபாரங்களுக்குள் பல மனிதர்களின் தியாகங்களும் அர்ப்பணிப்பும் அடங்கியிருக்கின்றது என்பது உண்மை.

# இயற்கையினூடே ஆலயம்

நான் சென்னையில் பட்டப்படிப்பு படித்த கல்லூரி W.C.C பெண்கள் கிறிஸ்தவ கல்லூரி. எங்கள் கல்லூரியில் மிக அழகிய சிற்றாலயம் உண்டு. அதனுள் செல்ல தரையளவோடு உயரமான வெராந்தா எல்லா பக்கத்திலும் இருக்கும். வெராந்தாவுக்கும் ஆலயத்திற்கும் நடுவே இருக்கும் இடத்தில் செடிகள் உண்டு. பசுமை சூழலின் நடுவில் ஆலயம் – அமைதியும் அழகுமாய் திகழும். தேவையில்லாத அழகூட்டும் சாதனங்கள் இல்லாமல், எளிமையான உட்புறம் மனதிற்கும் அமைதியை அளிக்கும். உயரமான (domes) குவிமாடங்கள் சத்தத்தை இதமாக்கிடும். இந்த ஆலயத்தின் கட்டட வடிவமைப்பாளர்தான் இதன் பின்னர் டோனாவூர் பெலொஷிப் (Dohnavur Fellowship) தேவலாயத்தையும் வடிவமைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஏமி கார்மைக்கல் அம்மாள் அந்த ஜெப வீட்டை கட்ட நினைக்கும் போது, அவருக்கு எதிர்பாராத இடங்களில் இருந்து உதவி வந்தது என்று அவரின் பல நூல்களில் எழுதிகிறார். அவர் மருத்துவமனையை தான் முதலில் கட்ட ஆர்வமாக இருந்ததாகவும் ஆனால் அவரின் தோழி, ஆப்பிரிக்காவில் இருந்து அம்மாளின் பிறந்த நாளையொட்டி பணம் அனுப்பி – இது ஆலய கட்டுமான பணிக்காக என்று குறிப்பிட்டுள்ளார். ஜெபத்தோடு பணிகளை தொடங்க முற்பட்டார் ஏமி. அச்சமயத்தில், கட்டிட வடிவமைப்பாளர் திரு. டான் (Dann) மற்றும் கட்டிட ஒப்பந்தகாரர் (Jackson) திரு. ஜாக்சன் அவர்களும் டோனாவூர் வந்து அம்மாளுடன் கிறிஸ்மஸ் பண்டிகை கொண்டாடவேண்டும் என்ற எண்ணத்தை தெரிவித்தனர். கடவுள் ஏமி அம்மாளுக்கு பணமும் ஆட்களையும் கேட்காமலேயே ஒழுங்கு செய்துவிட்டார்!.

1924 ஆம் ஆண்டு வேலை ஆரம்பம்... இந்தியாவிற்கு முன் சீனா, ஜப்பான் போன்ற நாடுகளிலும் பணிப்புரிந்த ஏமி அம்மாளுக்கு – ஆலயம் மேற்கத்திய பாரம்பரிய கட்டுமானமாக இல்லாமல் இயற்கையின் நடுவே அமைதியாகவும் அழகாகவும் இருத்தல் வேண்டும் என்பதே ஆசை. குழந்தைகள் ஆலயத்தின் பிரமாண்டத்தைப் பார்த்து அமைதியாகமல் இயற்கையாகவே அங்கு அமைதி சூழல் நிலவ வழிவகுத்தார்.

திருவாங்கூரின் கூரை வேய்ந்த அரணமனைகளில் ஏமி அம்மாள் சீன மக்களின் கட்டிட தாக்கத்தைப் பார்த்தார். சீனாவில் இயற்கையோடு இசைந்திருக்கும் கட்டிடங்கள் போலவே இங்கேயும் கண்டார். அதனால் ஆலயத்தைக் கட்ட திருவாங்கூர் கட்டிட தொழிளாளர்களையே உபயோகப்படுத்தினார். அக்காலத்தில், திருநெல்வேலியை விட அவ்வூர் மக்கள் வேலை கூலி குறைவாக கேட்டனர் என்பதையும் எழுதியிருக்கிறார்.

ஏமி அம்மாள் எதிர்பாரா வண்ணம், ஒரு உதவி தொகை அமெரிக்கா நாட்டில் இருந்து ஆலய பணிக்கு என்று வந்து சேர்ந்தது. அதை வைத்து அலய ஜெப கோபுரத்தை எழுப்பினார். அதன் மேல் அரையின் சுவரில் பாடல் வரிகள் பொரிக்கப்பட்டு குழாய் அமைப்பாலான ஆலய மணிகளும் உள்ளன. முழுப் பாடல்களையே இந்த மணிகள் வழியாய் இசைக்கலாம். யூடுப்பில் இப்போது இது பிரபலம்! பக்தி ஒரு பக்கம் என்றால் பணிகள் மற்றொரு பக்கம் நிச்சயம் தேவை என்பதை வலியுருத்தும் வண்ணம்- கோபுரத்தில் 2 கூச்சு முனைகள் உள்ளன!

ஆலயம் கட்டி முடிக்கும் முன்னே அதின் முகப்பில் செடி படர்ந்தது. அவர் நினைத்தபடியே. சிவப்பு செங்கற்களால் பூச்சு வேலையில்லாமல் அழகான வடிவமைப்பு கொண்ட கேரள கூரைகள் கொண்ட இந்த ஆலயம் வித்தியாசமாக எழில் மிகுந்து இன்றும் காணப்படுகிறது. பயபக்தியும் அழகும் சேர்ந்து அமைந்துள்ளது. ஆலயத்தின் உள் ஆடம்பரமற்ற வேலைப்பாடுகள் வளைவுகள் நிறைந்த தூண்கள், பலிப்பீடம் இருக்கும் திசை தவிர மற்ற இடங்களில் பெரிய ஜன்னல்களும் காற்றையும் ஒளியையும் அன்போடு வரவேற்கின்றன! சிவப்பு தரையை



சனிக்கிழமைதோறும் பிள்ளைகள் தேய்த்து, பளபளவென்று ஞாயிற்றுக்கிழமை ஆராதனைக்கு தயார் படுத்துவர். நவம்பர் 16, 1927 ஆம் ஆண்டு பிஷப் டப்ஸ் ஆலய பிரதிஷ்டை செய்து இவ்வாலயம் இந்தியத்துவம் நிறைந்து காணப்படுகிறது என்று கூறி வாழ்த்தினார். ஆலய வாசலின் நிலைகளில் தாமரை பூக்கள் செதுக்கப்பட்டுள்ளன.

டோனாவூர் ஃப்லோஷிப் வளாகத்தின் பெரிய வாசலமைப்பெல்லாம் **'நிலா வாசல்'** என்ற வடிவத்தைத் தாங்கியுள்ளது. ஏமி அம்மாள் - நடக்கும் பாதைகள், விளையாடும் இடங்கள், தோட்டங்கள், விலங்குகளுக்கும், பறவைகளுக்கும் இடங்கள் என எல்லாவற்றையும் குறித்து தீர்க்கமாய் யோசித்து செயல்படுத்தியுள்ளார்.

100 வருடங்களுக்கு முன்னரே இப்படி ஒரு சாதனையை பெண் ஒருவர் செய்திருப்பது வியப்பூட்டுகிறது. ஏமி கார்மைக்கல் அம்மாள் அழிவின் பிடியில் இருந்த சிறு பெண்களுக்கு விடுதலை மட்டுமின்றி, இரட்சிப்போடு கூடிய ஆழ்தத்துவம், அன்பு பாசம், பாதுகாப்பு நிறைந்த இடத்தையும் அவர்களுக்காக ஏற்படுத்தி கொடுத்தார்.

சர்வதேசங்களிலிருந்து எண்ணங்களையும் வடிவமைப்புகளையும் உள்வாங்கி நம் நாட்டின் கலாச்சாரத்திற்கு ஏற்பவும், நம் நாட்டின் தட்பவெப்ப நிலைக்கு ஏற்பவும் இந்த ஆலயம் இன்றும் தனித்தன்மையோடு நிற்கிறது. 2000 ஆம் ஆண்டு ஆலயம் செப்பனிடப்பட்டது. கடவுளின் வருகை வரை இதன் பணி சிறக்கட்டும், இயேசுவின் அன்பினால் ஏவப்பட்டு திக்கற்ற பெண்களை காப்பாற்றிய விதத்தை இவ்வாலயம் பரைசாற்றட்டும்.

*ரோடா அலெக்ஸ், சென்னை*



## ஏமி கார்மைக்கேல்

**தான் இம்மட்டும் வாழ்ந்து வந்த எல்லாவற்றினின்றும் பிரிக்கப்பட்டு நிலத்திலே விழுந்தும் சாகிறதான கோதுமை மணியைப் போல் இருக்க நான் மறுத்தால், கல்வாரியின் அன்பைக் குறித்து நான் ஒன்றும் அறியவில்லை .**






# சேலத்தில் மிசியோன் பங்களாக்கள்

**கட்டப்பட்டிருந்த பங்களாக்கள்**

நற்செய்திப் பணியை சிரமேற்று வெப்பம் நிலவும் அன்றைய ஒருங்கிணைந்த சேலம் மாவட்டத்திற்கு வந்த லண்டன் மிஷனெரி சங்கத் திருத்தொண்டர்கள் இங்கே தங்க வசதியான வாழ்விடம் இன்றி தவித்தனர். முதல் நற்செய்திப் பணியாளர்களான திருத்தொண்டர்கள் சங்கை ஹென்றி கிறிஸ்பு, மற்றும் அவரது மனைவி திருமதி. எலிசா ஸ்டெப்பி ஆகியோர் முதலில் சேலம் மாவட்ட கலெக்டரது பங்களாவில் அவரது விருந்தினர்களாக ஒரு மாத காலம் தங்கி இருந்ததாக சங்கை T. C. விட்னி ஐயர் எழுதிய 'A Hundred Years of Salem Mission History, 1936' (பக்கம் - 1)என்ற புத்தகத்தில் படித்திருக்கிறோம். அந்த பங்களா 1822 ல் ஆங்கிலேயர்களால் சேலம் மாவட்ட கலெக்டர்கள் தங்குவதற்காக கட்டப்பட்டிருந்தது (Salem Old Collector's Bungalow). பிற்காலத்தில் SP பங்களா (Police Office) என அழைக்கப்பட்டுவந்த அந்த பங்களா பின்னர், சேலம் சூப்பர் ஸ்பெஷாலிட்டி மருத்துவமனை கட்டப்படுவதற்காக கடந்த 2007 ஆம் ஆண்டு இடிக்கப்பட்டுப் போனது. அன்றைய சேலம் கலெக்டர் தங்கியிருந்த அந்த பங்களாவிற்கு எதிரே சாலைப் பகுதியைத் தாண்டி, சேலம் கோட்டைப் பகுதிக்கும், சேலம் செவ்வாய்ப் பேட்டைப் பகுதிக்கும், இடையே பங்களாவுடன் கூடிய 30 ஏக்கர் நிலம் சேலம் மிஷனுக்காக அன்று 1827 ஆம் ஆண்டில் வாங்கப்பட்டது. அந்த பங்களாவில்தான் சேலம் வந்த முதல் சீர்திருத்த கிறிஸ்தவ லண்டன் மிஷனெரி சங்கத் திருத்தொண்டர்களான ஹென்றி கிறிஸ்பு தம்பதியினர் தங்கியிருந்தனர்.

**கட்டிய பங்களாக்கள்:**

ஆங்கிலேயர்களும், ஐரோப்பியர்களும், மிஷனெரிமார்களும், தாங்கள் தங்குவதற்காக உறுதியான பங்களாக்களை இந்த நாட்டின் தட்பவெப்ப நிலைகளைக் கருத்தில் கொண்டு விசாலமாகவும் உயரமாகவும் கட்டினார்கள். அதனால் அந்த கட்டிடங்களில் வெப்பத்தின் தாக்கம் குறைந்தும், காற்றோட்டம் மிகுதியாகவும், இருந்தது. ஆங்கிலேய திருத்தொண்டர்கள் தங்கள் பணித்தளத்திற்கு வந்ததும் முதல்வேலையாக தாங்கள் தங்குவதற்கும், தங்களுக்கு பின்வரும் அடியார்கள் தங்குவதற்கும், ஏற்ற பங்களாக்களை கட்டிக்கொள்வதில் முனைப்பாக இருந்தனர். தலைசாய்த்து படுக்க கட்டிலும், மெத்தையும், மச்சுவீடும், இல்லாத ஐரோப்பிய குருமார்களை காண்பதரிது. அவர்களால் தியாகம் செய்யமுடியாதது அவர்கள் படுக்கும் கட்டிலும் , வாழும் பங்களாவும் மட்டுமே. காரணம் இந்த நாட்டில் நிலவிய கொடிய வெப்பத்தை அவர்களால் நாம் சந்திப்பதுபோல் சந்தித்து தாங்கிக் கொள்ள முடியாததே ஆகும். அப்படி அவர்கள் அன்று கட்டிய பங்களாக்கள் இன்றும் 200 மற்றும் 150 ஆண்டுகளுக்கும் மேலாகியும் உறுதியாக நிலைத்திருப்பது என்பது வியப்பானதுதான்.

**அஸ்தம்பட்டி பெர்னாட் தாமஸ் பங்களா:**

சேலம் அஸ்தம்பட்டி பகுதியில் அரசு கூடுதல் சுற்றுலா மாளிகையின் நேர் எதிராக சாரதா கல்லூரி சாலையில் அமைந்துள்ள CSI பல்தொழில்நுட்ப கல்லூரி ஆண்கள் விடுதி வளாகத்தில் தற்பொழுது இந்த பெர்னாட் தாமஸ் பங்களா உள்ளது. காலனி ஆதிக்க கட்டிடக்கலை வடிவமைப்பில் (Colonial Architectural Style) கட்டப்பட்ட இந்த கட்டிடம் இன்றும் உறுதியாக உள்ளது. தற்பொழுது இந்த பங்களாவின் ஹால் விடுதியின் சிற்றாலயமாக பயன்பட்டுவருகிறது.

அப்பொழுது சேலத்தில் சங்கை J. M. லெக்லர் ஐயர் இந்தியாவிலேயே முதன்முதலாக தொழிற்கல்வியைப் போதிக்கும் தொழிற்பயிற்சிப் பயிலகத்தை (Industrial School) 1840ஆம் ஆண்டு துவக்கி நடத்திவந்தார். இந்த தொழிற்பயிற்சி பயிலகத்தில் தனக்கு உதவியாகவும், பயிலகத்தை நடத்தவும் சுவிட்ஜர்லாந்து நாட்டின் பேசல் மிஷன் தலைமையகத்தில் (Basle Mission Institute at Crishona, near Basle, Switzerland) தொழில் துறையில் பயிற்சி பெற்ற ஒருவரை இந்தியா அனுப்பும்படி சங்கை லெக்லர் ஐயர் ஏற்கெனவே கேட்டிருந்தார். அதன்படி, பொறியாளர் திரு. கார்ல் இராம் (Mr. Carl Rahm)என்பவரை ஐரோப்பாவில் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்த திருமதி. லெக்லர் அம்மையார் இந்தியா அழைத்துவந்திருந்தார். சேலம் வந்த பொறியாளர் கார்ல் இராம் தங்குவதற்கு அஸ்தம்பட்டி பகுதியில் 1851 ஆம் ஆண்டு இந்த பங்களாவை சங்கை லெக்லர் ஐயர்

கட்டினார். இந்த பங்களாவில் சங்கை பெர்னாட் தாமஸ் (Rev. Bernard Thomas, L. M. S.,-சேவைக் காலம் -1924-1963) என்ற லண்டன் மிஷனெரி சங்கத் திருத்தொண்டர் இறுதியாக தங்கியிருந்தார். இதனால் இந்த பங்களாவை பெர்னாட் தாமஸ் பங்களா என மக்கள் அழைத்துவந்தனர். அதுவே இன்றுவரை அந்த பங்களாவின் பெயராக நிலைத்துவிட்டது. 1963 ஆம் ஆண்டிற்கு பிறகு இந்த பங்களாவும், அதனைச் சுற்றியுள்ள வளாகமும், N. C. C. அமைப்பிற்கு வாடகைக்கு விடப்பட்டது. N.C.C. Parade கள் நடைபெறும் இந்த வளாகத்தில், இராணுவத்திற்கு ஆள் சேர்க்கும் மையமாகவும் இந்த இடம் சேலத்தில் செயல்பட்டுவந்தது. 1984 ஆம் ஆண்டு தொடங்கி இந்த பங்களாவும், வளாகமும் CSI பல்தொழில்நுட்ப கல்லூரியின் ஆண்கள் விடுதியாக விளங்கிவருகிறது.

**ஆலங்குட்டை மிசியோன் பங்களா என்ற காலின்ஸ் பங்களா :**

அஸ்தம்பட்டியைத் தாண்டி ஏற்காட்டை நோக்கிச் செல்லும் வழியில் இருப்பது ஆலங்குட்டை என்ற பகுதி இங்குதான் ஆங்கிலேயர்கள் 1862ல் சேலம் மத்திய சிறைச் சாலையைக் ட்டினார்கள் அதனால் அந்த சிறைச்சாலைக்கூட ஆலங்குட்டை ஜெயில் என்றே அன்று அழைக்கப்பட்டது. அந்த சிறைச் சாலைக்கு எதிரே சாலையைத் தாண்டி அமைந்திருந்த ஆலமரங்கள்



நிறைந்திருந்த நிலப்பகுதியில் 1876 ஆம் ஆண்டு சங்கை மோரிஸ் பிலிப்ஸ் ஐயர் (Rev. Maurice Philips) இந்த அழகிய பங்களாவைக் கட்டினார். இந்த பங்களாவும் அப்படியே ஆலங்குட்டை மிசியோன் பங்களா எனவே அழைக்கப்பட்டது. அக்காலத்தில் 'மிஷன்'என்ற வார்த்தையை லுத்தரன் மற்றும் ஐரோப்பிய மிஷனெரிமார்கள் 'மிசியோன்' என தங்கள் மொழி உச்சரிப்பில் அழைத்ததும் அது அப்படியே சில விஷயங்களில் பின்பற்றப்பட்டிருக்கிறது. TELC திருச்சபையின் வரலாற்று நூல்கூட இப்படித்தான் 'தரங்கை மிசியோன் சரித்திரம்' என்றே தலைப்பிடப்பட்டிருக்கிறது.

ஆனால், தற்பொழுது இந்த பங்களா '**காலின்ஸ் பங்களா**' (Collins Bungalow) என்று அழைக்கப்படுகிறது. ஏனெனில், இந்த பங்களாவில் இறுதியாக குடியிருந்த லண்டன் மிஷனெரி சங்கத் திருத்தொண்டர் சங்கை D. P. காலின்ஸ் (Rev. D. P. Collins, L. M. S. -சேவைக் காலம் -1948-1973) என்பவரின் பெயரில் இந்த பங்களா இன்று பெயர் பெற்றது. இன்றும் உறுதியாக உள்ள இந்த பங்களா தற்பொழுது CSI பல்தொழில்நுட்ப கல்லூரியின் நிர்வாக அலுவலகமாக (Now Collins Bungalow is used as the Administrative Block in CSI Polytechnic College) செயல்பட்டுவருகிறது.

**அடிலெய்ட் ஹவுஸ் (Adelaide House)**

சேலத்தின் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஹோபார்ட் பெண்கல்வி இயக்கத்தின் சாட்சியான இந்த பங்களா 1892 ஆம் ஆண்டு கட்டப்பட்டது. அந்த பங்களாவிற்கு முதல் பெண்



திருத்தொண்டர் புறப்பட்டுவந்த தெற்கு ஆஸ்திரேலியாவின் அடிலெய்ட் நகரின் நினைவாக இந்த பங்களா 'அடிலெய்ட் ஹவுஸ் '(Adelaide House) என பெயரிடப்பட்டது. சேலத்தில் பெண்கல்வியை தனித்துவமாகவும், அனைவருக்கும் வசதியானதாகவும், தருவதற்கு ஆஸ்திரேலியாவின் தெற்கு பகுதியிலுள்ள அடிலெய்ட் நகரத்திலிருந்து முதல் பெண் திருத்தொண்டரான சகோதரி லோய்ஸ் அன்ஸ்லி காக்ஸ் அம்மையார் 1889 ஆம் ஆண்டு புறப்பட்டு வந்தது ஒரு சிறப்பான வரலாற்று நிகழ்வாகும். (In December 1889 the first women Missionary for Salem sailed from Adelaide, South Australia)

இந்த பங்களாவை சேலத்தில் பெண்கல்வியை பேணிய சகோதரிகள் அன்னி கிரெவுச் (Miss.Annie Crouch) மற்றும் மார்கரெட் லாட்ஜ் (Miss. Margaret Lodge) ஆகியோர் இணைந்து கட்டிமுடித்தனர். தொடர்ந்து இந்த பங்களா சேலத்தில் பெண்கல்வி இயக்கத்தின் மையமாக, பெண் திருத்தொண்டர்களின் உறைவிடமாக, திகழ்ந்துவந்தது. சேலத்திற்கு கோவைத் திருமண்டல பேராயர் விஜயம் மேற்கொள்ளும்போது அவர் தங்கும் பிஷப் பங்களாவாக இந்த பங்களா இப்பொழுது விளங்கிவருகிறது.

**வருங்கால சந்ததியினருக்கான வரலாற்றுச் சுவடுகள் :**

சேலம் மாவட்டத்தில் சிறந்த, வரலாற்று சிறப்புமிக்க, ஆங்கிலேயர் காலத்து கட்டிடங்கள் பல இருந்தாலும், பிறர் அன்பின் சாட்சிகளாகவும், அனைவருக்குமான பொதுக் கல்வி, பெண்கல்வி, இறையியல் கல்வி, தொழிற்கல்வி, மற்றும் நற்செய்தி அறிவிப்பு பணி, ஆகியவற்றின் மையமாக, சிறுமந்தையாக திகழ்ந்த அக்கால சேலம் லண்டன் மிஷன் திருச்சபையை வளர்ச்சிப் பாதையில் வழிநடத்திய மையமாக, இந்த பங்களாக்கள் விளங்கியதால் இவைகள் மனுக்குல மீட்பின் வரலாற்றுப் பாதையில் முக்கியத்துவம் பெறுகிறது. இந்த பங்களாக்களை வெறும் கட்டிடங்களாக பார்க்காமல், இந்த மகத்தான சாதனைகளின் தியாகம் நிறைந்த வரலாற்றின் சுவடுகளாக இவைகளை வருங்கால சந்ததியினருக்காக பாதுகாத்து விட்டுச் செல்வோம்.

***திரு. பர்னபாஸ்***
*சேலம்*

# 153 ஆண்டு பழமையான கோவிலூற்று பரிசுத்த சிமியோன் ஆலயம்

தென்காசி மாவட்டம் ஆலங்குளம் தாலுகாவில் உள்ள கிராமம் கோவிலூற்று. இந்த ஊரில் P P ஷாப்ட்டர் ஐயர் ஊழியம் செய்ததன் பலனாக இங்கு ஒரு சபை தோன்றியது. முதலில் இங்கு 1850 ம் ஆண்டு அக்டோபர் மாதம் 15ம் தேதி நல்லூர் உதவி மிஷினரியான ஸேப்டிமஸ் ஹாப்ஸ் (Septimus Hobbs) ஐயர் ஒரு சிறு ஜெப ஆலயத்தை பிரதிஷ்டை செய்தார். இந்த ஆலயத்தில் வைத்து ஆராதனை நடைபெற்று வந்தது. பின்பு இந்த சபையில் மக்கள் சேர்ந்தனர். இப்பகுதியில் ஊழியம் செய்து வந்த ஷாப்ட்டர் ஐயர் இடமாற்றம் செய்யப்பட்டு வில்லியம் கிளார்க் (William Clark) ஐயர் நல்லூர் மிஷினரியாக நியமிக்கப்பட்டார். அவர் கோவிலூற்றை ஒரு குருபீடமாக்கியும். ஞானமுத்து ஐயரை அங்கு குடியிருந்து கொண்டு சபைகளைக் கவனித்து வரும்படி ஏற்பாடு செய்தார் (1858). ஞானமுத்து ஐயர் வெகு திறமைசாலி. திருநெல்வேலி, மக்களில் குரு பட்டம் பெற்றவர்களில் முதலாவதானவர் (1847). அவருடைய ஓயா உழைப்பினாலும், திறமையான மேற்பார்வையினாலும் கோவிலூற்று வட்டாரச் சபைகள் தீவிர வளர்ச்சியடைந்தன. பின்பு சபையின் முக்கிய நபரும் ஊர் தலைவரான மனுவேல் நாடார் கோவிலூற்றில் ஒரு அழகிய ஒரு புதிய ஆலயம் கட்டவேண்டும் என தீர்மானித்தார். ரூபாய் 4500 செலவில் கட்டவேண்டும் என தீர்மானிக்கப்பட்டது. ஆலயத்தில் முன் மண்டபம், இருபுறமும் அறைகளும், பரிசுத்த ஸ்தலம் மற்றும் ஆலயத்தை சுற்றிலும் சுண்ணாம்பு செங்கல் கொண்டு மதில் கட்ட முடிவு செய்யப்பட்டது. சபை மக்கள் ரூபாய் 60 கொடுக்க தீர்மானித்தனர் மீதி ரூபாய் வசூலிக்க முடிவுசெய்யப்பட்டது.

1856 ஜூலை 16 ம் தேதி வில்லியம் கிளார்க் ஐயரால் இந்த ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டது. இந்த ஆலயத்தை கட்டிமுடிக்க சுமார் பன்னிரெண்டரை ஆண்டுகள் ஆனது. ஆலய கட்டுமானம் போதிய நிதி இல்லாமல் அடிக்கடி தடைபட்டது. சில நேரங்களில் ஆலய கட்டுமான திட்டங்களும் நிதிக்கேற்றவாறு மாற்றப்பட்டது. குறிப்பாக ஆலய ஜன்னல்களின் மேற்பகுதி வளைவு முழுவதும் கண்ணாடி பதிப்பதற்க்காகக் கட்டப்பட்டு பின்பு சாதாரண ஜன்னல்களாக மாற்றப்பட்டுள்ளது. ஆலயத்தின் அமைப்பு குறித்து Rev தேவசகாயம் ஞானமுத்து இவ்வாறு விவரிக்கிறார். ஆலயத்தின் மேற்கு பகுதியில் பரிசுத்த ஸ்தலம் கிழக்கிலிருந்து மேற்காக உள்ளது. 16 % அடி நீளம், வடக்கிலிருந்து தெற்கு வரை 12 % அடி அகலம், 15 % அடி உயரம், மற்றும் இது ஓடு வேயப்பட்ட கூரையைக் கொண்டு அமைக்கப்பட்டது. ஆலயத்தின் நடுப்பகுதி கிழக்கிலிருந்து மேற்காக 45 அடி நீளமும், 14 அடி அகலமும், 19 x உயரமும் கொண்டது; அதன் இரண்டு பக்கங்களிலும் நான்கு அலங்கார வளைவுகள், ஐந்து நல்ல வலுவான நீள்சதுரத் தூண்கள் அதற்கும் மற்றும் Altar க்கும் இடையில் ஒரு வளைவு கட்டப்பட்டுள்ளது, மேலும் இதன் மேற்பகுதி முழுவதும் தேக்கு மரத்திலான பலகைகளை வைத்து கூரைகள் ஓடுகளால் வேயப்பட்டுள்ளது. அதன் இரண்டு பக்கங்களிலும் நான்கு வளைவுகள், ஐந்து நல்ல வலுவான நீள்சதுரத் தூண்கள் அதற்கும் மற்றும் Altar க்கும் இடையில் ஒரு வளைவு கட்டப்பட்டுள்ளது, இடைகழிகள் (Aisles) ஒவ்வொன்றும் 49 அடி நீளம், 7 அகலம் மற்றும் 16 Y உயரம், மற்றும் தேக்கு மர பலகைகள் மீது சுண்ணாம்பு மற்றும் செங்கல் கொண்டு மாடி அமைக்கப்பட்டுள்ளது. இவை தவிர, இரண்டு பக்க அறைகள் உள்ளன, ஒவ்வொன்றும் 9 அடி சதுரம் மற்றும் 11 அடி உயரம், இரண்டும் தேக்கு மர பலகைகள் மீது



சுண்ணாம்பு மற்றும் செங்கல் கொண்டு மாடி அமைக்கப்பட்டுள்ளது. வடக்கிலிருந்து தெற்காக 14 அடி அகலமும், 11 அடி நீளமும், 13 % அடி உயரமும் கொண்ட ஒரு மண்டபம் ஆலயத்திற்கு முன்பாக உள்ளது, இது வலுவான சுற்றுத் தூண்களின் மேல் கட்டப்பட்ட பெரிய மற்றும் இரண்டு சிறிய வளைவுகள் மற்றும் சுண்ணாம்பு மற்றும் செங்கல் மாடியைக் கொண்டுள்ளது. ஆலயத்தின் கிழக்குச் சுவரில் ஒரு சிறிய மணி மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. முழு தேவாலயமும் அனைத்து பக்கங்களிலும் 2 அடி அகல செங்கல் சுவர்களால் மிகவும் நேர்த்தியாக கட்டப்பட்டுள்ளது. சுற்றுசுவர்களிலிருந்து தேவாலயத்தின் நீளம் கிழக்கிலிருந்து மேற்காக 123 அடி மற்றும் வடக்கிலிருந்து தெற்கே அகலம் 100 அடியில் அமைந்துள்ளது. ஆலயத்திற்கு கதவுகளும், ஜன்னல்களும், Communion Rails, மற்றும் கதவுகளும் போடப்பட்டுள்ளன. இந்த கோவிலூற்று ஆலயத்திற்கு பத்து ஆண்டுகளுக்கு மேலாக பொறுப்பாளராக இருந்த வில்லியம் கிளார்க் ஐயர் 1862 ம் ஆண்டு கணக்குகளை தேவசகாயம் ஞானமுத்து ஐயரிடம் ஒப்படைத்தார். ஞானமுத்து ஐயர் கோவிலூற்று வருவதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, யூஎஸ. கிளார்க் ஐயர் இங்கிலாந்திலும் பிற இடங்களிலும் உள்ள தனது நண்பர்களின் உதவியைப் பெற்று, தேவாலயத்தின் சுவரின் பெரும்பகுதியை முடித்தார். பின்பு ஆலயத்தின் பெரும்பகுதிகளையும் நடுப்பகுதி, பக்க அறைகள் மற்றும் தாழ்வாரத்தின் மாடி கூரைகளுக்கு மரங்களை கொண்டு வந்து வேலைகளை முடித்தார்.




திருநெல்வேலியில் வசிக்கும் மக்களிடம் கோரிக்கை வைத்ததன் பலனாக அதற்குப் பதிலளித்த பல மனிதர்கள், சுமார் 180 ரூபாய்க்கு நன்கொடை அளித்தனர். இந்த அருளாளர்களில், தாராளமாக 100 ரூபாய் வழங்கிய தூத்துக்குடியைச் சேர்ந்த C. Cocq, Esq., குறிப்பிடப்பட வேண்டியவர். இதற்குப் பிறகு, நீலகிரி மலைகளுக்குச் சென்றிருந்த Miss கிளார்க்கிடம், இந்த தேவாலயத்திற்காக கொஞ்சம் பணம் வசூலிக்கும்படி கிளார்க் ஐயர் கேட்டுக் கொண்டார், மேலும் அதன் சார்பாக ஆர்வத்துடன் பணியாற்றி மிஸ் கிளார்க் பல்வேறு இடங்கள் மற்றும் திருவிதாங்கூர் ராஜாவின் சமஸ்தானத்தில் கூட, சுமார் 450 ரூபாய் இந்த ஆலயத்திற்காக வசூலித்தார்; இதற்காக மிஸ் கிளார்க் அம்மையாருக்கு தேவசகாயம் ஞானமுத்து ஐயர் நன்றி கூறினார். மெட்ராஸ் பிஷப் டாக்டர் கெல், அவரது முதல் வருகையின் போது, ஆலயத்திற்கு 100 ரூபாய் நன்கொடையாக வழங்கினார். அதன்பிறகு, அவர் இங்கிலாந்து புறப்படுவதற்கு சற்று முன்பு திருநெல்வேலி மிஷனுக்குச் சென்ற மூத்த ஐயரவர்கள், மதராஸ் தொடர்புடைய சர்ச் மிஷனரி சொசைட்டியின் உறுப்பினர்களில் ஒருவருமான Rev. F. G. லுகார்டின் ஆலோசனை மற்றும் பரிந்துரையால், ஒரு பரிந்துரை மனு எழுதப்பட்டது. அந்த பரிந்துரை மனு மெட்ராஸ் பிஷப் கையொப்பமிட்டு, சென்னை, திருச்சி, மதுரை மற்றும் பிற இடங்களில் வசிக்கும் கிறிஸ்தவ நண்பர்களுக்கு அனுப்பப்பட்டு, சுமார் 200 ரூபாய் வசூலிக்கப்பட்டது. மீண்டும் Rev. கிளார்க், ஞானமுத்து ஐயரின் வேண்டுகோளின்படி, இங்கிலாந்தில் தாம் தங்கியிருந்த காலத்தில், 366. 8. 3 ரூபாயை, இந்த தேவாலயத்திற்காக சேகரித்து, ஆலயத்திற்கு அவர் ஒரு மணியைப் வாங்கியுள்ளார், இதற்கு கிளார்க் ஐயர் தனது சொந்தப் பணத்தில் ஒரு நல்ல தொகையைக் கொடுத்தார். மேற்கூறிய அறிக்கை, Rev. கிளார்க் இந்த தேவாலயத்தை கட்டி முடிப்பதில் மிகவும் ஆர்வமாக இருந்தார் என்பதை குறிக்கிறது, பெரும்பாலும் இதுவரை நடந்த வேலை அவருடைய உழைப்பால் முடிந்தது என்பதை காட்டுகிறது. மேற்கூறிய நன்கொடைகள் தவிர, ஞானமுத்து ஐயரின் நண்பரும், கண்டியில் உள்ள கூலி மிஷனின் மூத்த குருவானவரான பி. பீட்டர், அவருடைய வேண்டுகோளின் பேரில், இலங்கையில் உள்ள தனது நண்பர்களிடமிருந்து இந்த தேவாலயத்திற்காக 88 ரூபாயை சேகரித்தார். மேலும், ஆலயத்தில் உள்ள மக்கள் சார்பாக கடந்த எட்டு ஆண்டுகளில் ரூ 450 ரூபாய் நிதி திரட்டப்பட்டது, மாவட்ட முகவர்கள் மூலம் 25 ரூபாய் வழங்கப்பட்டது. மாவட்ட பொது நிதியில் இருந்து 35 ரூபாய் இந்த ஆலயத்தின் கட்டுமானத்திற்காக வழங்கப்பட்டது.

ஞானமுத்து ஐயர் கூறியதாவது 'இந்த தேவாலயம், விசுவாசத்தில் தொடங்கப்பட்டது என்று நான் நம்புகிறேன், மேலும் இது சுமார் 1500 மக்களைக் கொண்ட கிராமங்களின் மைய

வழிபாட்டுத் தலமாக மாறும்‘ இங்குள்ள மக்கள் அனைவரும் கிறிஸ்துவுக்குள் திரும்பினால், இந்த ஆலயம் போதுமானதாக இருக்காது என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது, மேலும் இந்த தேவாலயத்தை குறித்து அவர் கூறியது, கோவிலூற்று கிராமத்திலேயே சுமார் 400 பேர் உள்ளனர், அவர்கள் மனந்திரும்பினாலே இந்த ஆலயம் போதுமானதாக இருக்கும். இந்த தேவாலயம் தொடங்கப்பட்டபோது, ஒரு செல்வாக்கு மிக்க கிறிஸ்தவ ஊர் தலைவராக மனுவேல் நாடார் என்பவர் இருந்தார். ஆனால் அவர் இறந்துவிட்டதால் சபையில் உள்ள விசுவாசிகள் சிதறுண்டனர். அதற்கு பின்பு 35 பேர் மீது, வீடுகளை திறந்து கொள்ளையடித்ததாகப் பொய்க் குற்றம் சாட்டப்பட்டது. முப்பத்தைவரும் போலீசாரால் கைது செய்யப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டனர். சிறையிலும் அவர்கள் கொடூரமாக நடத்தப்பட்டார்கள். வழக்கு வெகுநாள் நடந்தது. புதுக்கிறிஸ்தவர்களும் பழைய சபையினரில் சிலரும் மறுதலித்துவிட்டனர். வழக்கு பொய்யானது என்று நிரூபிக்கப்பட்டது, அந்த முப்பத்தைவரிலும் அநேகர் தங்கள் பழைய மதத்துக்கே திருப்பிப்போயினர் (JI . 1857 ஹிலிஸ. 13 - W Clark). அதன் பின் துன்பம் ஓய்ந்தது. ஆனால் ஆலயக் கட்டுமானமோ நின்று விட்டது. மனுவேல் நாடாரை சார்ந்து இருந்த பல சபைமக்கள் சபையை விட்டு வெளியேறினர். சபையின் சிறுமையின் காரணமாக, இது போன்ற ஒரு தேவாலயம், இந்த இடத்திற்கு தேவையில்லை என்று பலர் நினைத்தார்கள். ஆனால் ஞானமுத்து ஐயரோ கோவிலூற்று ஆலயத்தைக் கட்டி முடிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். சபை சிறுத்துவிட்டதால் ஆலயத்தைச் சிறியதாகக் கட்டினால் போதுமென்று அவர் எண்ணவேயில்லை; யாராவது அப்படிப் பேசிவிட்டால் மிகுந்த கோபம் கொள்வார். மறுபுறத்தில் புறஜாதி மக்கள் எப்போது ஆலயத்தின் வேலை கைவிடப்படும் என்ற எதிர்பார்ப்பில் இருந்தனர். பணிக்கான நிதியும் மிக மெதுவாக வந்து கொண்டிருந்தது. இந்த சிரமங்களின் காரணமாக, மனக்கவலையுடன், கலந்த எண்ணங்களுடனும் ஆலயம் கட்டுவதற்கான பணி மேற்கொள்ளப்பட்டது. ஞானமுத்து ஐயர் விசுவாசமாக கூறியது I hope in the Lord, it is an encouraging token of a rich harvest of souls in this place‘. ஞானமுத்து ஐயர் ஆலயத்தைக் கட்டி முடிப்பதில் முழுமூச்சுடன் உழைத்து டிசம்பர் 1868 - ல் வெற்றி பெற்றார்.



டிசம்பர் 23, 1868 புதன்கிழமை கோவிலூற்று கிராமம் விழாக்கோலம் பூண்டது. புதிதாகக் கட்டி முடிக்கப்பட்ட ஆலயம் அலங்கரிக்கப்பட்டது. கோவிலூற்றின் சிறு சபையாரும், ஞானஸ்நான ஆயத்தக்காரரும், பக்கத்துக் கிராமச் சபைமக்களும் நல்லூர் ஆண் பெண் போர்டிங் பள்ளிகளின் மாணவ மாணவிகளும்- ஆக சுமார் 400 பேர் ஆலயத்தை நிறைத்துவிட்டார்கள். மதியம் 11 மணிக்கு பிரதிஷ்டை ஆராதனை ஆரம்பித்தது. நல்லூர் டிக்ஸன் ஐயர், டிக்ஸன் அம்மாள், சுரண்டை ஹானிஸ் ஐயர், ஹானிஸ் அம்மாள், Mrs. கெம்பர், உக்கிரன்கோட்டை அந்தோனி ஜேம்ஸ் ஐயர், சீவலசமுத்திரம் A . சாமுவேல் ஐயர், ஞானமுத்து ஐயர் அனைவரும் வந்திருந்தார்கள். விசாரணை உபதேசியார் T . சிமியோன் பிரதிஷ்டைக் கீதமொன்று தானே எழுதிக் சபையாருக்குக் கற்பித்திருந்தார். அது பாடப்பட்டது. ஹானிஸ் ஆகாய் 2:7 ‘இந்த ஆலயத்தை மகிமையால் நிறையப்பண்ணுவேன்‘ பேரில் பிரசங்கம் செய்தார். ஞானமுத்து ஐயர் நான்கு குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். டிக்ஸனும் சாமுவேலும் நற்கருணை ஆராதனை நடத்த, ஜேம்ஸும் ஞானமுத்தும் அதில் உதவி செய்தார்கள் - 180 பேர் நற்கருணை பெற்றார்கள். அன்று அவ்வாலயத்தின் உபயோகத்துக்காகப் பிரதிஷ்டை பண்ணப்பட்ட நற்கருணைப் பாத்திரங்கள் முன்னாள் மிஷனரி கிளார்க் ஐயரின் அன்பளிப்பாக வழங்கப்பட்டது. மறுதலித்து மனந்திரும்பின நம்பிக்கை மேரி, சுவிஷேசமுத்து, மரியன்னாள், சாமுவேல், யோவான் பவுல் (D. B. R. - ஈ2) ஆகிய ஐந்து பேரும் திருச்சபை ஜாபிதாவில் பெயரெழுதப்பெற்றார்கள். தற்போது (2022) இந்த ஆலயத்தின் பராமரிப்பு பணி நடைபெற்று வருகிறது. ஆலயம் முழுவதும் உள்ள பழைய பூச்சுகள் அனைத்தும் அகற்றப்பட்டு ஆலயத்தின் பழைமை மாறாமல் ஆலயத்தின் சுவர்கள் அனைத்தும் பூசப்பட்டுவருகிறது.

அருண்

கோவிலூற்று.




மகாகனம் கால்டுவெல் அத்தியக்ஷரவர்களின் மிஷனெரி ஊழியத்திற்கு ஞாபக சின்னமாய் விளங்கும் இடையன்குடி பரிசுத்த திருத்துவ தேவாலயம். அஸ்திபாரம் போடப்பட்டது. 1847 வருஷம். பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1880

இடையன்குடியும் அதன் பரி. திருத்துவ தேவாலயமும். இடையன்குடியின் சிறப்பிற்கும் மேன்மைக்கும் காரணம் மகாகனம் கால்டுவெல் அத்தியக்ஷரவர்களே, அவர்கள் 1841-ம் வருஷம் நவம்பர் மாதம் இடையன்குடிக்கு வந்தபோது அது 300 ஜனங்களடங்கிய ஓர் சிறு ஊராயிருந்தது; அதில் 100 பேர் கிறிஸ்தவர்கள். 200 பேர் குட்டத்திலிருந்து இங்கு வந்து வாசம் செய்த இந்துக்கள். அப்பொழுது யாதொரு ஒழுங்கில்லாமலும் மரஞ்செடிகளைல்லாமலும் தேரியின் ஒருபாகமாகவே தோன்றிற்று. அச்சமயம் கனம் ஐயரவர்களாயிருந்த அத்தியக்ஷரவர்கள் ஒரு சிறு பங்களாவில் குடியிருந்து சில இந்திய ஊழியரின் உதவியினால் சபைகளைச் சேர்க்கவும் இடையன்குடியிலும் அதன் பக்கத்து கிராமங்களிலும் பாடசாலைகளை ஸ்தாபிக்கவும் ஆரம்பித்தனர். இடையன்குடியில் தற்சமயம் ஆண் பாடசாலையின் ஓர் பாகமாகவிருக்கிற வடகடைசி கட்டடமே முன்னால் இடையன்குடியும் பக்கத்துச் சபைகளும் சேர்ந்த தொழுது கொள்ளும் ஓர் ஆலயமாயிருந்தது. வெகு விஸ்தாரமாகவும் சிலுவை வடிவமாகவுமிருந்தது. இடையன்குடியும் அதைச்சுற்றியுள்ள விஸ்தாரமான நிலங்களும் கிரயத்திற்கு வாங்கப்பட்டு ஜனங்கள் குடியேற்றப்பட்டார்கள், தெருக்கள் ஒழுக்காயும் நேராயுமிருப்பதற்கு அத்தியங்கரவர்கள் எடுத்துக்கொண்ட பிரயாசம் மிகுதி. கிறிஸ்தவர்களுக்கு குட்டத்து நாடாக்களால் பலவித இடுக்கண்களிருந்தன. அவைகளினின்றும் கிறிஸ்தவர்களை விடுதலை செய்தனர்.

இடையன்குடிக்கு ஓர் அலங்காரமான பெரிய ஆலயம் அதிக அவசியமென்ற அத்தியரவர்கள் நினைத்து இப்பொழுது இருக்கிற பெரிய கற்கோவில் அஸ்திபாரம் போடப்பட்டது. கட்டிடம் முடிய அநேக வருஷங்கள் சென்றன. கட்டுகிறதற்கு கொத்தர்களும் சிற்பாசாரிகளும் தலத்தில் இல்லாதபடியால் அத்தியஷ்ரவர்களே களிமண்ணினால் அவைகளைச் செய்து காட்டி, பிற்பாடு வேலைக்காரர் அவைகளை அந்தந்த இடங்களில் ஆலயத்தில் அமைத்தனர். அதுவுமன்றி இடையன்குடியிலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் சுவிசேஷ சபை வேலைகள் அதிகமாய் செய்ய வேண்டியதிருந்ததால் இடைப்பட்ட நேரங்களில் மாத்திரம் ஆலயக்கட்டுமான வேலையை மேற்பார்க்கக் கூடியதாயிருந்தது. ஆனது பற்றி ஆலயத்தின் வேலை வெகு மெதுவாய் நடந்தேறியது. 1847-ம் ஆண்டில் அஸ்தி பாரம் போடப்பட்ட இவ்வாலயம் 1880-ம் வருஷம் ஜூலை 6-ம் தேதியில் பிரதிஷ்டையானது. இவ்வாலயம் கிராதி அறை, இருபுறமாடம், மத்தியபாகம், கிராதி அறையின் தென் பாகத்தில் உடுப்பு அறை அமைந்துள்ளது. கிராதி அறை நீங்கலாக ஆலய கிழ மேல் 120 அடி, தென்வடல் 60 அடி. கோபுர உயரம் 72 அடி. இதற்கு உபயோகிக்கப்பட்ட கற்கள் இடையன்குடிக்கு ஏறக்குறைய நாலுமைலுக்கு மேற்கேயுள்ள குமாரபுரம் என்ற கிராமத்திற்குப் பக்கத்திலுள்ள கல்வெட்டால் குழியில் கிடைத்தவை. இக்கற்கள் அவற்றில் வைக்கப்படு முன் செங்கல் வடிவமாகச் செய்யப்பட்டு சுவரில் இணைக்கப்பட்டன. ஜன்னல்களும் தூண்களும் பலமான வெள்ளைக் கற்களினால் வேலை செய்யப்பட்டு கட்டடத்தில் அமைக்கப் பெற்றன. நற்கருணை திருமேசைக்கு மேலிருக்கும் கிழக்கு கல்ஜன்னல் அப்போது கவர்னராயிருந்த ஶ்ரீமான் நேப்பியர் பிரபுவின் நன்கொடையாம். அவர் 1868-ம் வருஷத்தில் இடையன்குடியை சந்தித்து அங்கு ஏறக்குறைய ஒரு வாரம் தாமதித்தபோது இந்த ஜன்னல் பணிசெய்யப்பட்டு அதன் இடத்தில் தூக்கி வைக்காமலிருந்ததைக்கண்டு அதன் செலவுக்காக ரூ.500 நன்கொடையளித்தனர். ஆலயத்திலுள்ள ஞானஸ்நானத் தொட்டி வெள்ளை சலவைக் கற்களால் பூ வேலையுடன் செய்யப்பட்டிருக்கிற அருமையான சாமான், ஒரு பெரிய உத்தியோகம் வகித்த ஶ்ரீமான் ராபர்ட் றெயிலர் துரையால் அளிக்கப்பட்ட இனாம். இனிமையான ராகம் பாடும் படியாக அமைக்கப்பட்டு கோபுரத்தில் ஏற்றப்பட்டிருக்கும் விலையேறப்பெற்ற நான்கு பெரிய மணிகளும் கால்டுவெல் அத்தியஷ்ரவர்களுடைய இனத்தாரில் ஒருவரால் நன்கொடையாக அளிக்கப்பட்டன. ஆலயத்தின் தளம் வெள்ளைக் கருங்கற்களால் விமரிசையாய் பதிக்கப்பட்டிருக்கிறது. கூரையானது துத்தநாகத்தகடுகளால் மூடப்பட்டிருக்கிறது.

இவ்வாலயத்தின் பிரதிஷ்டை ஆராதனை 1880-ம் வருஷம் ஜூலை 6 ம் நாள் காலை 11 மணிக்கு ஆரம்பித்தது. அதற்குமுன் இவ்வளவு காலமும் ஆராதனைக்காக உபயோகிக்கப்பட்ட பழைய கோவிலில் பதிபக்தி விநயமான கடைசி ஆராதனை நடந்தேறியது. அதன் பின் வெற்றி கொடி பிடித்து முன்னேறிய 50 பாடகரும் 35 இந்திய குருமாரும் 5 ஐரோப்பிய குருமாரும் கடைசியில் மகாகனம் பொருந்திய சார்சென்ற், கால்டுவெல் அத்தியக்ஷர்மாரும் புது ஆலயத்திற்கு நேராக பவனி சென்றனர். ஆலயத்தினுள் ஜனங்கள் நெருங்கியிருந்தனர். சுமார் 5000 பேர் வெளியில் நின்றனர். அவர்களுள் 2000 பேர் இந்துக்கள். ஆலயத்தினுள் பாடகர் பிரவேசிக்கவே, அச்சமயத்திற்காக மஹாகனம் கால்டுவெல் அத்தியக்ஷரவர்கள்களால் தமிழ் திருப்பப்பட்ட 'சபையின் அஸ்தியாரம்' (ஞானப்பாட்டு 1391 என்ற பாட்டுபாடப்பட்டது. பிரதிஷ்டை அதிபக்தி விநயமாய் நடந்தேறியது. அச்சமயத்தில் மகாகனம் சார்சென்ற் அத்தியரவர்கள் ஒரு அருமையான பிரசங்கம் செய்தனர். இந்த அருமையான ஆலயத்தைக் கட்டி இப்பாகங்களிலுள்ள சபைகளை நாட்டின மகாகனம் கால்டுவெல் அத்தியக்ஷரவர்களின் சரீரமும், பெண்களுக்குள் அதிக வேலை செய்து இஸ்ரவேலின் தாய்போல் விளங்கின கால்டுவெல் அம்மாளவர்களின் சரிரமும் இவ்வாலயத்தின் நற்கருணை அறையில் சேமிக்கப்பட்டிருக்கின்றன. மிஷனெரி ஊழியத்தின் நன்மையை உணர்ந்த இடையன்குடி தாய்மார் தங்கள் சொந்த பிரயாசத்தினால் அதிக பணம் செலவழித்து இப்பக்தர் இளைப்பாறுமிடத்தைச் சுற்றிலும் பதிக்கிறதற்கு பளிங்குக் கற்களை தோத்திரக் காணிக்கையாக படைத்தனர். இடையன்குடி பரிசுத்த திருத்துவ ஆலயம் மகாகனம் கால்டுவெல் அத்தியஷ்ரவர்களின் மிஷனெரி ஊழியத்திற்கு ஓர் நல்ல ஞாபக சின்னமாகயிருக்கிறது.

**மன்னா செல்வகுமார்**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –13

பொறாமைக் கணவன்

கங்காபாய் இறந்துவிட்டாள். நரஹரிராவ் மிகுந்த துயரம் அடைந்தார். அவள் உடலை எரித்து சாம்பலை ஆற்றில் கரைத்துவிட்ட பின்னர் மாமனார் வீட்டைத் திரும்பிப் பார்க்கவில்லை.

திவானோ மகளை இழந்த துக்கத்தில் இடிந்து போய்விட்டார். தினமும் கொஞ்சமாவது சாப்பிடச் செய்வதற்கு கமலாபாய் இல்லாத உபாயங்கள் எல்லாம் செய்து பார்த்தாள். துயரம் தாங்காமல், பட்டினி கிடந்தே உயிரை மாய்த்துக்கொள்வார் போல் தோன்றியது.

துக்கங் கேட்க வந்த உறவினர்களோ அவர் தம்பியோ ஒன்றும் செய்ய இயலாதவர்களாக இருந்தனர். அவர் மனைவியை வெறுத்து ஒதுக்கினார். அவளைப் பார்க்கவே அவர் விரும்பவில்லை. அவர் உடல் நலமும் வர வரக் குறையத் தொடங்கிற்று.

கிளாவிருந்தா தான் குற்றமற்றவள் என்று கமலாபாயிடம் அடித்துச் சொன்னாள். தன் கணவனிடமும் அதை எடுத்துச் சொல்லவேண்டும் என்று வேண்டிக்கொண்டாள். மாதவராவின் நடவடிக்கைகளைத் தானாகவே முதலில் கணவனிடம் சொல்லியிருந்தால், இந்தத் துன்பம் வந்திருக்காது; அதைச் சொல்லவிடாமல் தடுத்தது கமலாபாய் அல்லவா; அதையும் சுட்டிக்காட்டி, அவள் எப்படியாவது தனக்காகப் பரிந்து பேசி கணவனின் மனதை மாற்றவேண்டும் என்று வேண்டினாள். கமலாபாயோ, அவர் துக்க மிகுதியினால் தான் இவ்வாறு நடந்துகொள்கிறார்; அவர் மனநிலை சரியானதும் எல்லாம் சரியாகிவிடும்; அதுவரை பொறுத்திரு என்று சொல்லி வந்தாள்.

காலம் ஆற்றாத துன்பம் எதுவும் இல்லை. திவானும் சிறிது சிறிதாக நடமாடத் தொடங்கினார். அலுவலகக் காரியங்களையும் சொந்த வேலைகளையும் கவனிக்குமாறு தம்பியிடம் வேண்டிய உத்தரவுகளும் இட்டுவந்தார். ஆனால் மனைவியிடமுள்ள உறவிலோ எவ்வித மாற்றமும் இல்லை. அவள் கண்ணில் பட்டபோதெல்லாம் மூர்க்கமடைந்தார். தன் எதிரில் அவள் வரவே வேண்டாம் என்றும் கடுமையான உத்தரவிட்டார்.

மணமான புதிதில் இப்படி ஒரு சட்டம் பிறந்திருந்தால் கிளாவிருந்தா அதை மகிழ்ச்சியுடன் வரவேற்றிருப்பாள். ஆனால் இப்பொழுதோ கணவன் துக்கத்தில் ஆழ்ந்திருந்தார்; இச்சமயத்தில் அவரைத் தேற்றி அவர் துன்பத்தைப் பகிர்ந்து கொள்ளும் உரிமை அவளுடையது. ஆதாரமில்லாமல் அவள் கற்பைச் சந்தேகித்து அவள் உரிமையை மறுப்பதை அவளால் தாங்கமுடியவில்லை. தான் குற்றமற்றவள் என்று நிரூபித்துக் கணவனுக்குத் தன் மீதுள்ள சந்தேகத்தைப் போக்கவேண்டும் என்று அவள் மீண்டும் மீண்டும் கமலாபாயிடம் கெஞ்சினாள்.

கமலாபாயின் செயல்திறத்தைப் பற்றி இங்கு சில வார்த்தைகள் சொல்லியாகவேண்டும். அன்று இரவு கிளாவிருந்தா நோயாளியின் அறையைவிட்டு வெளியேறியதும், கமலாபாயும் மாதவராவும் கசமுசவென்று செய்கைகளால் அவசரப் பேச்சு நடத்தினர். கமலாபாய் அவனை உடனே வீட்டுக்குத் திரும்பிவிடுமாறு சொன்னாள். இன்னும் அரை மணிநேரம் கழித்து வந்தானானால், பெரியப்பா நோயாளியின் அறையில் இருப்பார். கிளாவிருந்தா சாப்பிட்டுக்கொண்டிருப்பாள். அப்பொழுது அவன் அவளிடம் சென்று சாவகாசமாகப் பேசி காதலை உறுதிப்படுத்திக்கொண்டு பிரியாவிடை பெற்றுச் செல்லலாம் என்று சொல்லியிருந்தாள்.

மாதவராவுக்கு இப்படித் திடீரென்று பட்டுக்கோட்டைக்கு மாற்றலாகும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. மைத்துனர் மனதில் தான் ஊன்றிய சந்தேகவிதை முளைத்து மரமாகியதன் விளைவுதான் அது என்பதை அவள் ஊகமாய் உணர்ந்தாள். மாதவராவ் மீது தவறே இல்லை; குற்றமெல்லாம் கிளாவிருந்தாவுடையது தான் என்றபடியே அவள் மைத்துனரிடம் பேசிப் பேசி அவர் மனதில் விஷத்தை ஏற்றியிருந்தாள். கங்காபாய் திடீரென்று படுத்துவிட்ட போது, வீட்டுக் கவலையில் அவள் இந்த விஷயத்தில் கவனம் செலுத்துவதை சிறிது தள்ளிப்போட்டிருந்தாள்.

இன்று மாதவராவ் விடைபெற்றுச் செல்ல வந்தபோது, அவனையும் கிளாவிருந்தாவையும் தனிமையில் சந்திக்கவைத்து தன் திட்டத்தை உச்சக் கட்டத்துக்குக் கொண்டுவந்துவிடலாம் என்ற யோசனையில் தான் அவனை அவசரமாக வீட்டுக்கு அனுப்பிவைத்தாள். பையன் தஞ்சையை விட்டுக் கிளம்பு முன்னர் ஏதாவது செய்யாவிட்டால், அவள் பழிவாங்கும் திட்டம் நிறைவேறாமலே போய்விடலாம் என்று பயந்தாள். ஆகவே இடையில் நடந்த இந்த எதிர்பாராத நிகழ்ச்சியால் அவள் மிகுந்த மகிழ்ச்சியுற்றாள். கிளாவிருந்தாதான் குற்றவாளி என்று மைத்துனரிடம் துணிவாக அடித்துச் சொன்னாள். மாதவராவ்

வெகுளி; ஜாலக்காரி விரித்த வலையில் விழுந்துவிட்ட அப்பாவி ஆண் பிள்ளை; அவனைக் குற்றம் சொல்ல முடியுமா என்ற தோரணையில் பேசினாள். இல்லாதது பொல்லாதது எல்லாம் சேர்த்துச் சொல்லி அந்த உத்தமியின் நற்பெயரில் கரியைக் குழைத்துப் பூசினாள்.

வீட்டு முற்றத்தில் எமன் வந்து நிற்கும்போதும், வெட்கங்கெட்டு இப்படிச் செய்தாளே என்று அவளை ஏசினாள். ஆனால் கிளாவிருந்தாவிடம் தனிமையில் மிகுந்த பரிவும் அநுதாபமும் உள்ளவள் போல் பேசிவந்தாள். சரியான வேளை வரும்போது நான் அவளுக்காகப் பரிந்து பேசி உதவி செய்வதாக வாக்களித்துத் தேனொழுகப் பேசினாள்.

பொறாமையில், திவானின் கண்கள் குருடாகிவிட்டிருந்தன. திரைமறைவில் கமலாபாய் நிகழ்த்திய பேச்சுக்களைக் கேட்டுக் கேட்டு அவர் மனம் வெகுவாகக் கலைந்திருந்தது. ஆனால் அன்று இரவு அந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் தன் மனைவியின் முகத்தில் கண்ட திகில், சினம், துயரம் இவையெல்லாம் உண்மை: நடிப்பு அல்ல என்பதை அவர் உணராமல் இல்லை. அவள் பேசிய ஒவ்வொரு சொல்லும் அவள் உள்ளத்திலிருந்து வந்தது என்பதையும் தமது நெஞ்சாழத்தில் தெளிவாகவே உணர்ந்தார். ஆனால் அவளைப் பிற ஆடவன் ஒருவன் முத்த மிட்டுவிட்டான் என்ற நினைவு பொறாமையையும் ஆத்திரத்தையும் தூண்டிக்கொண்டிருந்தது. அதனால் அவள் எப்படிக் குற்றவாளியாக முடியும்? கற்பில் சிறந்த உத்தமிக்கும்கூட இதுவோ, இதைவிடக் கேவலமான ஒரு நிகழ்ச்சியோ ஏற்படலாமே என்று அவர் நினைத்துப் பார்க்கவில்லை. அவர் கட்டிய மனைவியின் எதிரிலே தன் மைத்துனியுடன் காதல் கேளிக்கைகள் நடத்தியவர். இப்பொழுது தன் மனைவியைப் பிறன் முத்தமிட்டுவிட்டான் என்பதால், அவள் கறைபட்டவள் என்று அவளை ஒதுக்கி வைத்து தன் கண்ணில் படவும் கூடாது என்று சொல்லி விட்டார். இது அவளை அவமானப்படுத்துவதாகும். அவளுக்குக் கொடுமை இழைப்பதாகும் என்று அவருக்குப் படவே இல்லை. அவரோ எந்நாளும் உள்ள வழக்கம்போல மைத்துனியிடம் கைபிடித்த மனைவிபோலப் பழகி அந்தக் கள்ள உறவை வெளிப்படையாய்த் தொடர்ந்து நடத்தி வந்தார்.

சுயமரியாதையுள்ள பெண்ணுக்கு, கணவன் துரோகமே பெருத்த அவமானமாகும். அது போதாதென்று இங்கே காரணமில்லாமல் அவள் கற்பையும் பழித்துக் கூறினார்கள். அவள் வாழ்வே ஒரு பெரும் ஒப்பாரியாகிவிட்டது போலிருந்தது. அதன் பல்லவி அவள் கற்பில் சுமத்தப்பட்ட இழுக்கு. அனுபல்லவி ஏச்சும் வசையும். சிரிப்பு, மகிழ்ச்சி என்ற சரணங்கள் எல்லாம் அந்த இசையில் தள்ளுபடி. நிலைமை அவளால் தாங்க இயலாமல் போயிற்று. உலகில் தனித்தவளானாள். கசப்பும் துயரமும் அவள் நெஞ்சில் பொங்கி வழிந்தது. தற்கொலை செய்துகொண்டு இந்த அவல வாழ்வை முடித்துவிட்டால் என்ன என்று அவளுக்கு அடிக்கடி தோன்றிற்று.

திவானின் முதல் மனைவி இறந்து வெகு காலமாகியும் அவர் மறுமணம் செய்துகொள்ளாமல் இருந்தபோது, தம்பி, அமாத்யாவின் பிள்ளைகளில் ஒருவனைத் தத்து எடுத்துக் கொள்ளும்படி அவரைப் பலரும் வற்புறுத்தினார்கள். சொத்துக்கு வாரிசு ஆகவும், கட்டைக்குக் கொள்ளி வைக்கவும் பிள்ளை வேண்டாமா? ஆனால் கங்காபாய்க்கு ஆண் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கையினால் அதற்கு உடன்படவில்லை. இப்பொழுது அவள் குழந்தை இல்லாமல் இறந்துவிட்டாள். கிளாவிருந்தா மூலம் தனக்கு மகன் பிறப்பதற்கும் இனி வழியில்லை. ஆகவே இப்பொழுது தன் ஆத்மா கரையேறவேண்டுமே என்ற கவலை திவானைப் பற்றிக் கொண்டது.

அமாத்யாவுக்கு ஏழு வயதில் நாராயணன் என்று ஒரு மகன் இருந்தான். இன்னும் பூணூல் போடவில்லை. அவனைத் தத்து எடுத்துக்கொள்ளும்படியாக அமாத்யா அண்ணனிடம் சொல்லி வந்தார். அமாத்யாவின் அடுத்த ஆண் குழந்தைக்கு இரண்டு வயதே ஆகிறது. ஆகவே புத்திரஸ்வீகார நியமப்படி நாராயணனை உடனே தத்து எடுத்து அவனுக்கு உபநயனம் நடத்துவது நல்லது என்று சொன்னார்கள்.

திவானும், அமாத்யாவும் ஒருநாள் வீட்டு மாடியிலிருந்து பேசிக்கொண்டிருக்கும்போது, அமாத்யா, 'நான் இந்த மாதம் நாராயணனுக்குப் பூணூல் கலியாணம் நடத்தி விடலாம் என்று இருக்கிறேன். அதற்குள் உங்கள் எண்ணத்தைத் திட்டமாகத் தெரிந்து கொண்டால் நல்லது' என்றார். திவான் பதில் சொல்லவில்லை.

'தற்காலிகமாகத் தத்து எடுத்துக்கொண்டாலும் சரிதான். உங்களுக்கு ஆண் குழந்தை பிறந்துவிட்டால், நாராயணன் என் வீட்டுக்குத் திரும்பிவிடட்டும். உங்கள் சொத்தில் உரிமை கேட்கமாட்டான்.'

திவான் எரிச்சலுடன் 'அது நடவாது. நான் இனி அவள் முகத்திலும் விழிப்பதில்லை' என்றார்.

அமாத்யாவின் வஞ்சக முகத்தில் ஒரு சிறு முறுவல் நெளிந்தது. உடனேயே முகத்தை நேராக ஆக்கிக்கொண்டு, 'அப்படியானால் நாராயணனைச் சுவிகாரம் செய்து உபநயனத்தை நீங்களே நடத்திவிடுவீர்கள் என்று நினைக்கிறேன்' என்றார் அமாத்யா.

'என் மைத்துனி தன் குடும்பத்துப் பையன் ஒருவனை நான் தத்து எடுத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லிவருகிறாள்' என்று சொன்னார் திவான். தொடர்ந்து, 'இரு, இரு, குறுக்கே பேசாதே. அது நடக்காத காரியம் என்று நான் அவளிடம் தெளிவாகச் சொல்லிவிட்டேன். அவளுக்குக் கொடுப்பதைத் தாராளமாகக் கொடுத்துவிட நான் தயாராக இருக்கிறேன். ஆனால் குடும்பச் சொத்துக்கு ஒரு அந்நியனை வாரிசாக்க ஒருநாளும் சம்மதிக்கமாட்டேன்' என்றார் தீர்மானமான குரலில்.

அமாத்யா நிம்மதியுடன், 'சந்தோஷம் அண்ணா . தன்னுடைய ஒன்றுவிட்ட தம்பியின் மகனை நீங்கள் சுவிகாரம் செய்து கொள்ளப் போவதாக கமலாபாய் வெளியில் சொல்லி வருவதாக நான் கேள்விப்பட்டேன். ஆனால் உடன் பிறந்த தம்பியின் பிள்ளைகள் இருக்கும்போது, அந்நியனைத் தத்து எடுத்துக்கொள்வீர்கள் என்பதை என்னால் நம்பமுடியவில்லை. கங்காவுக்கு உடல் நலம் தேறி ஆண் குழந்தையும் பிறக்கும் என்று எவ்வளவோ ஆசையோடு இருந்தோம். என்ன செய்வது, விதி மோசம் செய்துவிட்டது. ஆனால் இந்தச் சுவிகாரத்தைப்பற்றி மன்னி என்ன நினைக்கிறாள்? அவளுடைய ஸ்தீரிதனச் சொத்தும் ஏராளமாக இருப்பதால் அவளுடைய சம்மதமும் இதற்குத் தேவையல்லவா?'

அவளிடம் யார் இதைப்பற்றிக் கேட்டார்கள்? என் விருப்பத்திற்கு விரோதமாகப் போகத் துணியமாட்டாள் என்றே நினைக்கிறேன். அப்படித் துணிந்தாளானால் சனியனை வீட்டைவிட்டே விரட்டிவிடவேண்டியது தான். அறப்பணிகள் நிறுவுவதற்காக உப்பூர், மகாராஜாவிடமே இன்னும் இருந்து

வருகிறது. சரியானபடி இப்பொழுது நான் தான் அதற்குப் பொறுப்பாளியாக இருந்து அதைக் கவனிக்கவேண்டியது. அவரிடம் அதைப்பற்றிப் பேசினாயா? ஏதாவது சொன்னாரா? ஆனால் இப்போதைக்கு அதைப்பற்றிப் பேசாமல் இருப்பதே நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது' என்றார் திவான்.

திருமணத்தின்போது இரண்டு கிராமங்களையும் உங்கள் மனைவிக்கு ஸ்தீரிதனமாகக் கொடுப்பதாகவும், அதற்கு முன்னால் கிராமங்களின் வருமானத்தால் சேர்ந்த தொகையைக்கொண்டு, பண்டிதராவ் விரும்பியபடி அறப்பணிகள் நிறுவி விடுவதாகவும் மகாராஜா சொல்லிக்கொண்டிருந்தார். என்னுடைய கணக்குப்படி சேர்ந்த தொகையே ஏராளமாக இருக்கிறது. நூறு மாணவர்கள் கொண்ட பாடசாலை நிறுவவும், சத்திரம் கட்டவும், ராமேஸ்வரத்துக்குப் போகும் வழியில் கிணறுகள் தோண்டவும் அதுவே போதுமானது. கிழவரும் இந்த தர்ம பணிகளைத்தான் விரும்பியிருந்தார். ஆனால் கலியாணத்தின்போது மலையூரை மாத்திரம்தானே அரசர் உங்களுக்குக் கொடுத்தார். அதைக்கூட ஏன் கொடுத்தோம் என்று இப்பொழுது நினைப்பார்போலத் தெரிகிறது. ஆகையால் உப்பூரைப்பற்றி இப்பொழுது பேச்சு எடுக்காமல் இருப்பதே நல்லது. நான் சரியாகக் கணக்கு வைத்துக்கொண்டு வருகிறேன். ஏதாவது நல்ல வேளை வரும்போது பார்த்து அந்த உரிமையைக் கிளப்பிக் கொள்ளலாம்' என்றார் அமாத்யா.

'ஆனால் என் மனைவியின் சார்பாக உள்ள உரிமையை மகா ராஜா இல்லை என்று சொல்லிவிட முடியாது. நியாயத்தை மறுக்கமுடியுமா?' என்றார் திவான்.

'மறுக்க முடியாதுதான். ஆனால் நியாயஞ் செய்வதென்றால், ரொக்கமாக இப்பொழுது அவரால் பணத்தைக் கொடுத்து விட முடியுமா? என்னைவிட உங்களுக்கு அவரை வெகுகாலமாகத் தெரியும், எப்பொழுது முடிகிறதோ அப்பொழுது கொடுப்பார். நமது காலத்தில் கொடுத்துவிடுவார் என்று எனக்குத் தோன்றவில்லை' என்று இழுத்தார் அமாத்யா.

சிறிது நேரம் கழித்து அமாத்யா 'ஆனால் ஒப்புக்காவது, சுவிகார சம்பந்தமாக மன்னியின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்வது நல்லது. நீங்களே கேட்கிறதாக இருந்தால் கேளுங்கள் அல்லது என் மனைவியை அனுப்பி அவளிடம் கேட்டுக்கொள்ளலாம். கமலாபாய் மூலமாகப் பேசுவது உசிதமில்லை. அவள் குசும்புதான் செய்வாள்' என்றார்.

திவான், 'அது ஒன்றும் அவசியமில்லை. நான் அவளிடம் கேட்கப்போவதில்லை' என்றார் முதலில். ஆனால், யோசித்து விட்டு, 'வேண்டுமானால் உன் மனைவியை அனுப்பிக் கேட்டுப்பார். எனக்கென்னமோ இது அவசியமாகப்படவில்லை. அவளுக்குத் தன் சொத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாது' என்றார். அமாத்யா தலையாட்டிவிட்டுப் புறப்பட்டார்.

வினை விதைத்தவன் ......

இந்தப் பேச்சு நடந்து மூன்று நாட்களுக்குப் பின்னர் ஒருநாள் திவான் தமது அறையில் அமர்ந்து ஏதோ தாள்களையும் கணக்குப் புத்தகங்களையும் பார்வையிட்டுக்கொண்டிருந்தார். அப்பொழுது அவர் மனைவி தயங்கிக்கொண்டே உள்ளே நுழைந்தாள். அவரிடம் பேச விரும்புவதாகச் சொன்னாள். ஆனால் அவர் அவளிடம் கடுமையாகப் பேசி அவளை அறையினின்று வெளியே போகச் சொல்லிவிட்டார். ஒரு மணி நேரம் கழித்து அவள் மீண்டும் அறையினுள் வந்து அவர் எதிரே ஒரு கடிதத்தை வைத்துவிட்டு அமைதியாக வெளியே சென்றாள். திவான் வியப்புடன் அதைத் திறந்து படிக்கலானார். கடிதம் அழகான சுத்தமான மராத்தியில் எழுதப்பட்டிருந்தது. எழுத்துக்கள் தெளிவாக மணியாக இருந்தன. வியப்படைந்த திவான் படிக்க ஆரம்பித்தார்:

மாண்புமிக்க கணவரின் தாமரைப் பாதங்களை வணங்கிக் கொண்டு, கிளாவிருந்தா எழுதுவது என்னவென்றால்:

பின்வரும் விஷயங்களைத் தங்கள் கவனத்துக்குக் கொண்டு வர கருணையுடன் அனுமதி அளிக்குமாறு கேட்கின்றேன்.

தங்கள் பத்தினியாகிய என்னிடம் தாங்கள் பேசவிரும்பாததாலேயே நான் இம்முறையைப் பின்பற்ற வேண்டியதாகிவிட்டது. விஷயமும் முக்கியமானதாதலால் அதைப்பற்றி என் கருத்தைத் தாங்கள் அறிந்து கொள்வது அவசியமாகிறது. அடுத்தடுத்து ஓரகத்தி அவர்கள் மூலமாகத் தாங்கள் அவர்களுடைய மகன் நாராயணனை வாரிசாகவும் மகனாகவும் சுவிகாரம் செய்துகொள்ளத் தீர்மானித்திருப்பதாக அறிந்தேன். நானும் அதை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று அவர் சொன்னார். எனக்குக் குழந்தை பிறக்காவிட்டால், என் சீதனச் சொத்துக்களுக்கு அவன் வாரிசாவதற்கு நான் சம்மதிக்க வேண்டும் என்று சொன்னார். என்னை இழிவாக அவமானப்படுத்தி எனக்கும் என் கணவருக்கும் பிளவு உண்டாகக் காரணமாக இருந்த ஒரு மனிதரின் தம்பியை வாரிசாகவும் மகனாகவும் சுவிகாரம் செய்து வளர்க்க நான் ஒருநாளும் ஒப்புக்கொள்ள முடியாது.

என் சீதனச் சொத்தாக, ஒரு வீடும் இரண்டு தோட்ட வீடுகளும், ஒரு செழிப்பான கிராமமும் – உள்ளன என்றும், திருமணத்திற்குப்பின் அந்தக் கிராமத்தின் அனுபவ உரிமை தங்களிடம் இருந்து வந்திருக்கின்றது என்றும் அறிகின்றேன். அதைத் தவிர இன்னொரு கிராமம் மகாராஜாவின் மேற்பார்வையில் இருந்து வருவதாகவும், அறப்பணிகள் நிறுவுவதற்கு அதைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்று புனிதமும் பெருமையும் மிக்க என் பாட்டனார் விருப்பம் தெரிவித்திருந்ததாகவும் அறிகின்றேன். என் பாட்டனாரின் விருப்பங்களை கூடிய சீக்கிரம் நிறைவேற்றி வைக்க வேண்டுமாறு என் சார்பாக மகாராஜாவிடம் பேசும் படியாக உங்களைக் கேட்டுக்கொள்கின்றேன். மகாராஜாவுக்கு இதைச் செய்வதற்கு அவகாசம் கிடைக்காவிட்டால், தாங்களே சிரமத்தைப் பொருட்படுத்தாமல், காலமான என் பாட்டனாரின் நினைவாக அந்தத் திருப்பணிகளைச் செய்யுமாறு உங்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

எக்காரணத்தினாலாவது மகாராஜாவின் அனுபவத்தில் இருக்கும் கிராமத்தைக்கொண்டு அறப்பணிகள் நிறுவ இயலாதுபோனால், என் சீதனச் சொத்தான கிராமத்தின் மூலமாகவாவது அப்பணிகளைச் செய்யவேண்டும் என்பது எனது விருப்பம். தங்களுக்கு ஏற்கெனவே மிகுந்த செல்வம் இருப்பதாலும், வாரிசு இல்லாமல் இருப்பதாலும், தாங்கள் இதற்கு ஒப்புக்கொள்வதில் மட்டுமல்ல இந்தப் புண்ணிய கைங்காரியத்தை நிறைவேற்றுவதில் எனக்கு மகிழ்ச்சியுடன் உதவியும் செய்வீர்கள் என்றும் நம்புகிறேன். அறப்பணி வேலை முடிந்த பிறகு நான் என் சொத்தைப் பற்றிக் கவலைப்படமாட்டேன். தங்கள் விருப்பப்படியே அதைத் தாங்கள் பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனால் எனக்கு இன்னும் இருபது வயதுகூட நிரம்பாததால், இப்பொழுது சுவிகாரத்தைப்பற்றி

ஆலோசிப்பது பொருத்தமில்லாமலும் அகாலமாகவும் தோன்றுகிறது. ஒரு பதிவிரதைக்கு அவளுடைய கணவனின் அன்புதான் மூவுலகங்களையும் விடச் சிறந்தது என்பது அறிவும் மாண்பும் மிக்க தங்களுக்குத் தெரியாதது அல்ல. அந்த மாபெரும்வரத்தை நான் பெறக் கொடுத்து வைக்காமல் இருக்கும் போது, இந்தப் பூமியில் வேறு எதன்மீது எனக்கு நாட்டம் இருந்துவிட முடியும்?

"நான் களங்கம் இல்லாதவள், தங்களுக்குத் துரோக மிழைக்காதவள் என்று நான் பக்தி கொண்ட அனைத்தின் மீதும் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்."

**இப்படிக்கு,**

**தங்கள் தாமரைப் பாதங்களை வணங்கும்**

**கிளாவிருந்தா.**

திவான் கடிதத்தைப் பலமுறை படித்தார். அதன் நடையும், அதில் அவள் வெளியிட்டிருந்த உணர்ச்சிகளும், அவற்றை அவள் எடுத்துச் சொல்லிய அழகும் அவரைக் கவர்ந்தன.

திவான் கல்நெஞ்சக்காரர் தான். இருந்தும் இளமனைவியின் இந்தச் சீரிய கடிதம் அவர் இதயத்தைத் தொட்டது. இன்ன தென்றில்லாத ஒரு பச்சாத்தாபமும் பயமும் அவர் மனதில் தோன்றின. ஆனால் அதற்குள் அவருடைய துர்த்தேவதை, கமலாபாயின் வடிவத்தில் அறைக்குள் நுழைந்துவிட்டது - அவள் கோபத்திலும் படபடப்பிலும் துடித்துக்கொண்டிருந்தாள். ஆத்திரமிகுதியால் அவளுக்கு பேச்சுத்திணறியது.

'இரண்டு பேரில் ஒருத்தி இந்த வீட்டை விட்டு உடனே வெளியேறியாகணும். உங்களுக்காக இதுவரை பொறுத்தாகி விட்டது. இனிமேல் முடியாது. நேற்று வந்த பிடாரி என் மூஞ்சிக்கு எதிரே என்னை ஏசுகிறது. என்னை இப்பொழுதே அனுப்பிவையுங்கள். இத்தனை வருஷமா இந்த வீட்டில் மாடாக உழைச்சதுக்குக் கைமேல் பலன் கிடைச்சாச்சு. உங்க படிச்ச பெண்டாட்டியோடே நீங்க சுகமா இருங்கோ, ஆசை நாயகனுக்குக் கடிதாசு எழுதறதையும் பாத்துண்டிருங்கோ' என்று படபடவென்று பொரிந்தாள்.

உத்தமி கிளாவரிந்தாவின் கடிதம் இன்னும் அவர் கையில் தான் இருந்தது. ஆனால் இதற்குக் காரணம் அவரே அல்லவா?

ஆனால் இந்த அடங்காப்பிடாரியின் எதிரில் அவர் எதுவும் செய்ய இயலாதவராக இருந்தார். தன் இழிந்த நிலைக்காகத் தன்னையே வெறுத்துக்கொண்டார். 'இப்பொழுது என்ன நடந்துவிட்டது கமலா? விஷயத்தைச் சொல்லு' என்றார் மெல்லிய குரலில்.

கமலாபாய் ஆத்திரத்துடன் கத்தத் தொடங்கினாள்: 'என்ன நடந்ததா? சிறிது நேரமாக அவளை வீட்டில் எங்குமே காணவில்லை. அவள் காதலனும் போய்விட்டானே, வேறு யாரையாவது விழுங்கப் பார்க்கக் கொல்லைப்புறம் போய் விட்டாளோ என்று நினைத்தேன். எழுதுகிற சாமான்களை எடுத்துக்கொண்டு கங்காவின் அறைக்குள் அவள் நுழைந்ததாக, சமையல்காரி கல்யாணி சொன்னாள். கொஞ்ச நேரம் கழித்து அவளைப் பார்த்தபோது, யாருக்குக் கடிதம் எழுதினாய் என்று கேட்டேன். அவள் ஏதோ மழுப்பினாள். சாகஸக்காரி. காதலனுக்கு எழுதினாயோ என்று பச்சையாகவே கேட்டேன். மரியாதைகெட்டவள் என்ன பதில் சொன்னாள் என்கிறீர்கள்? நான் கலியாணமானவள், பத்தினி, திருட்டுத் தனமாகக் காதலர்களுக்கு எழுதுவதற்கு நான் விதவை அல்ல என்கிறாள்! போகிறது என்று அவமானத்தைப் பொறுத்துக்கொண்டு, காதலனுக்கு அல்லாவிட்டால் பின் யாருக்கு எழுதினாய் என்று திரும்பவும் கேட்டேன். அவளுக்குக் கோபம் வந்துவிட்டது! அந்த இடத்தில் நிற்காமலே அவள் பாட்டுக்கு நடந்துவிட்டாள். ஆனால் போகிற போக்கில் என்ன சொன்னாள் என்கிறீர்கள்? எனக்கு காதலர் இல்லை. ஆகவே நான் என் காதலனுக்கு எழுதவில்லை. உங்கள் காதலருக்குத்தான் எழுதிக்கொண்டிருந்தேன் என்றாள். சத்தமாகவேதான் சொன்னாள். வேலைக்காரர்களுக்குக்கூட காதில் விழுந்தது. அவர்கள் எல்லோரும் சிரிக்கிறார்கள். எவ்வளவோ பொறுத்தாகிவிட்டது. இனிமேல் முடியாது. அவளோடு இந்த வீட்டில் என்னால் இருக்கவே முடியாது' என்று முடித்தாள். விஷயத்தின் நகைச்சுவையைக் கண்டதும் அவரால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. மனைவியைக் குற்றம் சொல்ல முடியுமா? சிரத்தையுடன் பேசுவது போல் பாவனை செய்து கொண்டு :

அவள் உண்மையைத்தானே சொன்னாள். அவள் இந்தக் கடிதத்தை எனக்குத்தான் எழுதிக்கொண்டிருந்திருக்கிறாள். நான் உன் காதலன் அல்லவா?' என்றார். கமலாபாயின் கண்ணீர் மடை திறந்து கொண்டது. 'காலமெல்லாம் உங்களுக்கு விசுவாசமாய் உழைத்தேன். கைமாறாக நீங்களும் அவமானம் செய்யுங்கள்' என்று விசும்பத் தொடங்கினாள். அவர் நன்றி மறந்தவர், கொடுமைக்காரர் என்றெல்லாம் விசும்பல்களுக்கிடையே அவரைத் தாக்கினாள். குழந்தையின் வலிமை அதன் கண்ணீரில்தான் என்று ஒரு சமஸ்கிருதப் பழமொழி உண்டு. எழுத்தறிவில்லாத பெண்ணும் பலவிதங்களில் குழந்தையை ஒத்தவளே. சிறிது முளை விட்ட தன் ஆத்மபலம் அவள் கண்ணீரில் கரைந்து போவதை திவான் உணர்ந்தார். தானாகவே இட்டுக்கொண்ட இந்த இழிவிலங்குகளுக்காக அவர் தன்னைத்தானே வெறுத்தார். அவள் அந்த வீட்டில் காலடி எடுத்து வைத்த வேளையையும் நொந்து கொண்டார். தன் மனைவியின் கடிதத்தைப் படித்ததுனாலுண்டான நல்லுணர்ச்சிகள் அவர் மனதில் சில வினாடிகளே நீடித்தன. கமலாபாயின் கண்ணீரும் கம்பலையும் அவள் குற்றச்சாட்டும் அவற்றைத் தகர்த்தன. அவள் அவரோடு பகிர்ந்து கொண்ட இன்ப துன்பங்களை எல்லாம் அவள் நினைவூட்டி அழுதபோது அவர் நெஞ்சம் அவளுக்காக நெகிழ்ந்தது. அவள் கண்ணீரைப் பார்த்துக்கொண்டு அவரால் சும்மா இருக்க இயலவில்லை. விளையாட்டாகப் பதில் சொல்லி அவளை நோகச்செய்து விட்டோமே என்று மனம் வருந்தினார். அண்மையில் அவர் உடல் நலமில்லாமல் இருந்தபோது அவள் அன்புடன் செய்த சிகிச்சையினால் அல்லவா உயிர் பிழைத்தோம் என்றும் எண்ணினார். அவளைப் பரிவுடன் அணைத்துத் தேற்றத் தொடங்கினார். அவள் அந்த வீட்டில் அடியெடுத்து வைத்த நாள் தொடங்கி அவள் செய்திருக்கும் பணிகளுக்கெல்லாம் தாம் என்றென்றும் அவளுக்குக் கடமைப்பட்டிருப்பதாகவும், தன் வாழ்நாளெல்லாம் அவளிடம் விசுவாசம் பூண்டு நடந்துகொள்வதாகவும் வாக்கு அளித்தார். மனைவியின் தறுதலைத் தனத்தைத் தட்டிவைப்பதாகவும், அந்த வீட்டில் அவள் கமலாபாய்க்குப் பணிந்திருக்கவேண்டியவள் என்பதை அவளுக்கு உணர்த்துவதாகவும் சத்தியம் செய்து கொடுத்தார். எப்படி எல்லாமோ கெஞ்சிக் கூத்தாடி அவள் கோபத்தைத் தணித்து அவள் மன்னிப்பையும் பெற்றார்.

**தொடரும் ..**

திருநெல்வேலியின்

# தொன்மைமிகு மிஷன் கட்டிடங்களின் வரலாறு

சங்ககாலம் முதல் இன்றைய காலகட்டம் வரை மக்கள் தொடர்ச்சியாக வாழ்ந்து வரும் பழமைமிகு நகரம் திருநெல்வேலி. 1994 ஜூன் ஒன்று முதல் திருநெல்வேலி மாநகராட்சியாக செயல்பட்டு வருகிறது.

சங்ககாலத்தில் ஆய் ஆண்டிரன் எனும் குறுநில அரசராலும் சங்ககால பாண்டிய அரசர்களாலும், அவர்களைத் தொடர்ந்து களப்பிரர், முற்கால பாண்டியர்கள், பிற்காலச் சோழர்கள், பிற்காலப் பாண்டியர்கள், விஜயநகர நாயக்கர் ஆட்சியாளர்கள், பாளையக்காரர்கள், ஆற்காடு நவாப் என பலரால் ஆளப்பட்ட திருநெல்வேலி மாநகரம் 1790 இல் ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனி ஆட்சிக்கு உட்பட்டதாக மாறி 1801 இல் முழுமையாக ஆங்கிலேயரின் நேரடி ஆட்சிக்கு உட்பட்டது.

### திருநெல்வேலி மாவட்டம் உருவாக்கம்

ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சியாளர்கள் 1790.01 செப்டம்பரில் திருநெல்வேலி மாவட்டம் என்ற மாவட்ட அமைப்பை உருவாக்கினார்கள். அது தற்போதைய திருநெல்வேலி, விருதுநகர், ராமநாதபுரம், தூத்துக்குடி, தென்காசி மாவட்டங்கள் ஆகிய பகுதிகளைக் கொண்ட பரந்த மாவட்டமாக இருந்தது. தொடர்ச்சியாக மாவட்ட கலெக்டர்களும் நியமிக்கப்பட்டனர்.

1801 இல் ஆங்கிலேயரின் முழுமையான நேரடி ஆட்சி ஏற்பட்ட பின் காவல்துறை கண்காணிப்பாளர் நியமிக்கப்பட்டார். 1820 இல் திருநெல்வேலி மாவட்டத்தின் மக்கள் தொகை சுமார் 7,81,296. 1820 இல் திருநெல்வேலி நகரில் மட்டும் 23,000 வசித்தனர்.

### மிகப்பழமை வாய்ந்த மிஷன் கட்டிடங்கள்

### இராணுவக் குரு. கனம். ஜேம்ஸ் ஹாப்வ் காலம் 1816-1821

ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ராணுவ குருவாக 1816 ஆகஸ்ட் மாதம் பாளையங்கோட்டைக்கு கனம்.ஜேம்ஸ் ஹாப்வ் வந்து சேர்ந்தார். இராணுவக் குருவாக இருந்த போதும் மிஷனரி ஊழிய ஆர்வலராக இருந்த அவர் மூக்குப்பீறி, பொறையார், சிதம்பரபுரம் ஆகிய மூன்று இடங்களில் சபைகளை நிறுவி இருந்தார். ஏழு பள்ளிக்கூடங்களும் நிறுவப்பட்டிருந்தது.

அக்காலத்தில் S.P.C.K மிஷன் மூலம் 63 சபைகளும் 2830 கிறிஸ்தவர்களும் மிஷனுக்கு சொந்தமான தேவாலயங்களும் பள்ளிக்கூடங்களும் நிலங்களும் பல இடங்களில் இருக்கிறதையும் அதை மேற்பார்வை செய்து கண்காணிப்பு செய்ய மிஷனரிகள் இல்லாத நிலையையும் நீண்ட அறிக்கையாகக் கல்கத்தா பேராயருக்கு 26.10.1819 அன்று அனுப்பியிருந்தார். மேற்கண்ட சபைகளை கண்காணிக்க மிஷனரிகளை அனுப்பும்படி S.P.C.K மிஷன் சங்கத்திற்கும்

S.P.G மிஷன் சங்கத்திற்கும் கோரிக்கை வைத்தார் அவர்கள் ஏற்காத நிலையில் சி.எம்.எஸ் மிஷன் சங்கத்திற்கு கடிதம்




எழுதினார். அவரது வேண்டுகோளை ஏற்று அந்த சங்கத்தார் சென்னையில் நற்செய்தி பணியாற்றி வந்த தங்களுடைய மிஷனரி கனம். ரேனியஸ் ஐயரவர்களை பாளையங்கோட்டையை தலைமையிடமாகக் கொண்டு தொடங்கப்படவுள்ள தங்கள் மிஷன் ஊழியத்திற்கு பொறுப்பாளராக நியமித்து ஆணை பிறப்பித்தனர். கனம்.ஜேம்ஸ் ஹாப்வ் ஐயரவர்கள் 1818 இல் ஆசிரியர்கள் மற்றும் சபை ஊழியர்களை பயிற்றுவிக்கும் செமினரியையும் பள்ளிக் கூடத்தையும் நடத்தி வந்தார்கள்.

அவரால் மூன்று மிஷன் கட்டிடங்கள் கட்டப்பட்டு இருந்தன. அவையே திருநெல்வேலியில் இருந்த பழமையான மிஷன் கட்டிடங்கள் அவை மேரி சார்ஜென்ட் மேல்நிலைப்பள்ளி அமைந்திருக்கும் இடத்திலிருந்த தெற்கு பங்களா, அப்பள்ளியின் பழங்கால பிரதான கட்டிடம், மற்றொன்று தற்போதைய கதீட்ரல் மேல்நிலைப்பள்ளியின் சமையலறை இருக்குமிடத்திலிருந்த பழைய கட்டிடம் ஆகியவையே ஆகும். இம்மூன்றும் கனம். ஜேம்ஸ் ஹாப்வ் ஐயரவர்கள் நிலம் வாங்கி கட்டிய மிஷன் கட்டிடங்கள் இந்த மூன்று கட்டிடங்களே திருநெல்வேலியின் பழமையான மிஷன் கட்டிடங்கள்.

மேற்கண்ட பழமையான மிஷன் கட்டிடங்களும் கட்டிடங்களை சுற்றியுள்ள ஏராளமான காலி இடங்களும் தோட்டமும் கொண்ட இப்பகுதி இராணுவக் குருவானவர் கனம்.ஜேம்ஸ் ஹாப்வ் ஐயரவர்களால் காலி மனையாக வாங்கப்பட்ட இடமாகும். திருநெல்வேலி - திருச்செந்தூர் நெடுஞ்சாலையின் தென் பகுதியில் இந்த இடங்கள் இருந்தது. இந்த இடத்திற்கு எதிர்ப்புறம் திருநெல்வேலி - திருச்செந்தூர் நெடுஞ்சாலையின் வடபகுதியில் திரு.வெங்கு முதலியார் அவர்களுக்கு வயல்களும் வயல்கள் மத்தியில் பங்களாவும் இருந்தது. ஏராளமான நில புலன்களுக்கு சொந்தக்காரராக திரு.வெங்கு முதலியார் அவர்கள் இருந்தார்கள்

ஆதலால் மேற்கண்ட அந்த இடங்களை ஹாப்வ் ஐயரவர்கள் திரு. வெங்கு முதலியார் அவர்களிடமிருந்து வாங்கி இருக்கலாம் என அனுமானிக்க முடிகிறது.

அந்த இடத்தில் ஹாப்வ் ஐயரவர்கள் தென் பகுதியில் பங்களா. பங்களாவின் முன் பகுதியில் ஒரு பள்ளி கட்டிடம், கீழ்ப்பகுதியில் ஒரு பள்ளி கட்டிடம் கட்டியிருந்தார்கள். அதில் செமினெரியையும் பள்ளிக்கூடத்தையும் நடத்தினார்கள்.

1820 இல் ஹாப்வ் ஐயரவர்கள் சி.எம்.எஸ் மிஷனுக்காக அந்த இடமனைத்தையும் குறைந்த விலைக்கு தர முன் வந்தார்கள். இதுகுறித்து ரேனியஸ் ஐயரவர்கள் சி.எம்.எஸ் மேலிடத்திற்கு கடிதம் எழுதி ஒப்புதலைப் பெற்று அந்த இடத்தை 1820 ஜூலையில் வாங்கினார்கள். 1821-இல் ஹாப்வ் ஐயரவர்கள் பூந்தமல்லிக்கு பணிமாற்றம் செய்யப்பட்டார்கள்

### பேராயர் பங்களா எனும் தொன்மை வாய்ந்த மிஷன் கட்டிடம்

திருநெல்வேலியில் சீர்திருத்த கிறிஸ்தவ திருச்சபையில் 11.03.1877 இல் சென்னை பேராயரின் கீழ் உதவி பேராயராக சி.எம்.எஸ் மிஷன் சபைகள் அனைத்தையும் கண்காணிக்கும்படி மகாகனம். சார்ஜென்ட் அவர்கள் அருட்பொழிவு பெற்ற காலம் முதல் பிஷப் என்ற வார்த்தை சீர்திருத்தத் திருச்சபை பிஷப்பை குறிப்பதாக மட்டுமே இருந்தது. 1972 இல் திருநெல்வேலி கத்தோலிக்க மறைமாவட்டம் உருவாக்கப்பட்டு ஆயராக மகாகனம் இருதயராஜ் ஆண்டகை அவர்கள் நியமிக்கப்பட்ட பின்பே சி.எஸ்.ஐ. பிஷப் கத்தோலிக்க பிஷப் என வேறுபடுத்தும் நிலை உருவானது. அதுவரை பிஷப் பங்களா என்பது சி.எஸ்.ஐ. பிஷப் பங்களாவையே குறிப்பதாக இருந்தது.

பாளையங்கோட்டை மிஷனரி வசிக்கக்கூடிய பங்களாவாக பிஷப் சார்ஜென்ட் பள்ளி வளாகத்தில் பள்ளமான இடத்தில் வயல்களின் மத்தியில் இருந்த பங்களா காணப்பட்டது அந்த மிஷன்



பங்களாவில் தான் பாளையங்கோட்டை வட்டார மிஷனரியாக பேராயர் சார்ஜென்ட் அவர்கள் ஊழியம் செய்த போது வசித்து வந்தார். அவர் உதவி பேராயராக 11.03.1877 அன்று கல்கத்தா தூய பவுல் பேராலயத்தில் அருட்பொழிவு பெற்று திரும்பிய நிலையில் பேராயராக பணி செய்த நிலையிலும் அதே பங்களாவிலேயே வசித்து வந்தார். 1888 டிசம்பரில் சுகவீனம் ஆன பேராயர் சார்ஜன்ட் அவர்களுக்கு மருத்துவம் செய்ய திருச்சியில் இருந்து வரவழைக்கப்பட்ட டாக்டர் நான்வே பேராயர் சார்ஜன்ட் வசித்து வரும் அந்த பங்களா சுகவீனம் ஆன அவரது உடல் நிலைக்கு ஏற்றதாக இல்லை. உடனடியாக பேராயர் அவர்களை வேறு வீட்டிற்கு இடமாற்றம் செய்யுங்கள் என உறுதிபட கட்டளையிட்டார். பேராயர் அவர்களை தங்க வைக்க எந்த இடத்திற்கு கொண்டு போகலாம் என திகைத்து நின்ற சூழ்நிலையில் சுகவீனம் ஆன பேராயர் அவர்களை சந்தித்து உடல் நலம் விசாரிக்க வந்த தெய்வபக்தி மிகுந்த திருநெல்வேலி மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் ஆன District Police Superintendent திரு ஸ்டீபன்சன் அவர்களிடம் டாக்டர் நான்வே அவர்கள் கட்டாயம் பேராயர் அவர்களை வேறு வீட்டிற்கு இடமாற்றம் செய்ய வேண்டும் என சொன்ன தகவல் சொல்லப்பட்டது. இதைக் கேட்ட ஸ்டீபன்சன் தாம் வசித்து வந்த மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் பங்களாவை காலி செய்து பேராயர் அவர்களுக்கு கொடுப்பதாக வாக்குறுதி அளித்தார் உடனடியாக பேராயர் குடியேறும்படி தமது வீட்டை காலி செய்து கொடுத்தார். காவல் கண்காணிப்பாளர் பங்களாவாக மேட்டுப்பாங்கான இடத்தில் அடர்ந்த மரங்கள் மத்தியில் அமைந்திருந்த அந்த பங்களாவே 1889 ஜனவரி முதல் இன்று வரை பேராயர் பங்களாவாக செயல்படுகிறது.

### கனம்.ரேனியஸ் ஐயரவர்களால் வாங்கப்பட்ட மிஷன் பங்களா

ஆண்களுக்கான செமினெரி பெண்களுக்கான பள்ளிக்கூடம் ஆகியவை ஒரே காம்பவுண்டில் இருந்ததால் இடவசதி குறைவு காணப்பட்டது. அதன் காரணமாக கூடுதலாக மாணவ மாணவியரை சேர்க்க இயலவில்லை உபதேசிமாரின் மனைவியர் கல்வி கற்காதவர்களாகவும் கிறிஸ்தவ வேத அறிவு இல்லாதவர்களாகவும் இருந்ததால் உபதேசிமார்களின் பிள்ளைகளும் வேத அறிவு இல்லாது இருந்ததைக் கண்ட ரேனியஸ் பெண்கள் பள்ளிக்கூடத்தை பெண்கள் செமினெரி போன்று நடத்த எண்ணினார். ஆனால் அதற்குப் போதிய இடம் இல்லாது இருந்தது. இந்த நிலையை கண்ட ரேனியஸின் நண்பர் கொடை வள்ளல் திரு. வெங்கு முதலியார் திருநெல்வேலி-திருச்செந்தூர் நெடுஞ்சாலையின் வடபுறம் தமக்குச் சொந்தமாக இருந்த பங்களா மற்றும் தோட்டங்களை உள்ளடக்கிய பெரிதான நிலம் ஒன்றை குறைந்த விலைக்கு தர முன்வந்தார். அந்த இடம் 1825 இல் 750 ரூபாய்க்கு ரேனியஸால் வாங்கப்பட்டது. இந்த இடம் தற்போதைய பிஷப் சார்ஜென்ட் பள்ளி வளாக இடமாகும்.

ஹாப்வ் ஐயரவர்களிடம் இருந்து ரேனியஸால் வாங்கப்பட்ட இடம் தெற்கு காம்பவுண்ட் என்றும் அதிலிருந்த பங்களா தெற்கு பங்களா என்றழைக்கப்பட்டது. ரேனியஸ் வெங்கு முதலியாரிடமிருந்து வாங்கிய இடம் வடக்கு காம்பவுண்டு என்றும் அழைக்கப்பட்டது. அதில் இருந்த பங்களா வடக்கு பங்களா என்றும் அழைக்கப்பட்டது. இவ்விரண்டு மிஷன் கட்டிடங்களும் மிகவும் பழமை வாய்ந்தவை.

### 120 ஆண்டுகளுக்கு முன்பே தூண்கள் இல்லாமல்



பிரம்மாண்டமாகக் கட்டப்பட்ட நூற்றாண்டு மண்டபம்

### சி.எம்.எஸ் மிஷன் சங்கத்தின் தோற்றம்

உலகமெங்கும் நற்செய்திப் பணி செய்யும்படியாக இங்கிலாந்திலுள்ள ஆங்கிலிக்கன் திருச்சபையில் சடங்காச்சாரங்கள் அற்ற சுத்த சுவிசேஷம் எனும் சுத்தாங்க சுவிசேஷ கொள்கையில் உறுதி கொண்டிருந்த போதகர்கள், சபை மக்கள் அனைவரும் இணைந்து The Society for Missions to Africa and the East என்ற பெயரில் 12.04.1799 அன்று மிஷனரி சங்கத்தைத் தொடங்கினர். இச்சங்கத்தை தொடங்க மூல காரணமாக இருந்தவர்கள் கனம். சார்லஸ் சிமியோன் என்ற இளம் குருவானவர், வில்லியம் வில்பர் போர்ஸ் எனும் இளம் பாராளுமன்ற உறுப்பினர், ஜான் வென் (ரெக்டர்,கிளாபம் செக்ட்), பெசில் வுட், சார்லஸ் கிராண்ட், ஜார்ஜ் உதய், டேவிட் பிரவுன், தாமஸ் பாபிங்டன், ஹென்றி தார்ன்டன், தாமஸ் ஸ்காட் ஆகியோர் ஆவர்.. இச்சங்கத்தின் முதல் செயலாளராக தாமஸ் ஸ்காட் அவர்களும் முதல் பொருளாளராக ஹென்றி தார்ன்டன் அவர்களும் பொறுப்பேற்றனர், 1799 ஆம் ஆண்டு ஏப்ரல் 12 ஆம் நாள் தொடங்கப்பட்ட இச்சங்கம் 1812 இல் சர்ச் மிஷன் சங்கம் எனும் சி.எம்.எஸ் எனும் பெயரைப் பெற்றது. இங்கிலாந்திலுள்ள லண்டனில் ஆக்ஸ்போர்ட் பகுதியில் இச்சங்கம் நிறுவப்பட்டது. இச்சங்கம் 1820 முதல் திருநெல்வேலியை (பாளையங்கோட்டை) தலைமையிடமாகக் கொண்டு தனது பணித்தளத்தை தொடங்கியது.



பழைய திருமண்டல அலுவலகம்

### நூற்றாண்டு கொண்டாட்டம்

தென் தமிழகத்தில் சி.எம்.எஸ் மிஷன் சங்கத்தின் தலைமை இடமாக பாளையங்கோட்டை இருந்தது. அங்கு சி.எம்.எஸ் தலைமைச் சங்க நூற்றாண்டு விழா 1899 ஏப்ரல் மாதம் 11, 12, 13 நாட்களில் மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது அதற்கான அலங்காரப் பந்தல் 210 அடி நீளம், 120 அடி அகலம், 15 அடி உயரம் என்ற அளவில் அக்காலத்தின் தூய யோவான் நடுநிலைப்பள்ளி வளாகத்தில் அமைக்கப்பட்டது. நூற்றாண்டு கொண்டாட்டத்திற்காக மூன்று ஆண்டுகளாக திட்டங்கள் வகுக்கப்பட்டது.

### நூற்றாண்டு மண்டப கட்டுமான பணி

நூற்றாண்டு கொண்டாட்டத்திற்காக சபைகளில் தோத்திர காணிக்கை படைக்கப்பட்டது. காணிக்கையின் ஒரு பகுதி சி.எம்.எஸ் மிஷன் சங்கத்தின் தலைமையிடமான லண்டனுக்கு அனுப்பப்பட்டது. மீதமிருந்த 35,000 ரூபாயைக் கொண்டு நூற்றாண்டு நினைவாக மண்டபம் ஒன்றைக் கட்டுவது என தீர்மானித்தனர். பேராயர் மகாகனம். மார்லி அவர்களால் 12.04.1899 அன்று நூற்றாண்டு மண்டபம் கட்ட அடிக்கல் நாட்டப்பட்டது.

### நூற்றாண்டு மண்டப பிரதிஷ்டை

தூண்கள் இல்லாமல் நல்ல நீள, அகல, உயரத்துடன் பெரிதான அளவில் கட்டப்பட்ட நூற்றாண்டு மண்டபம் திருநெல்வேலி சி.எம்.எஸ் மாவட்ட சர்ச் கவுன்சில் தலைவராகவும், சி.எம்.எஸ் தலைமை மிஷனரி ஆகவும் இருந்த Rev. E.S. கார் ஐயரவர்களால் (கார் மிஷனரி) 13.07.1904 அன்று பிரதிஷ்டை செய்யப்பட்டது. அக்காலத்தில் தூண்கள் இல்லாமல் மிகப்பிரம்மாண்டமாக நீள அகல உயரத்துடன் கட்டப்பட்ட முதல் கட்டிடம் என்ற பெயரை இந்த நூற்றாண்டு மண்டபம் எனும் மிஷன் கட்டிடம் பெற்றது. பாளையங்கோட்டைக்கு வருகைதரும் சபை மக்களும் பொது மக்களும் தூண்கள் இல்லாமல் கட்டப்பட்ட இந்த நூற்றாண்டு மண்டபத்தைப் பார்த்து வியப்படைந்து சென்றார்கள் என்பது பாரம்பரிய செவிவழிச் செய்தி. இந்த மண்டபம் இன்றளவும் சி.எம்.எஸ் மிஷன் ஊழியத்தை நமக்கு நினைவுபடுத்தி வருவது குறிப்பிடத்தக்கது

**J.ஜான் ஞானராஜ்**
**கல்லிடைக்குறிச்சி**



# தேவன் கோவில்....!

முனைவர் த.ஜான்சிபால்ராஜ்

தேவன் என்றால் இறைவன், கடவுள் என்றும் பொருள்படும். தற்காலத்தில் தேவன் என்னும் இப்பதத்தை தமிழகச் சமயங்களுள் கிறித்தவ சமயத்தில் தான் அதிக அளவில் பயன்படுத்தப்படுவதைப் பார்க்க முடிகிறது. இறைவன் உறையும் இடம் கோவில் என்று வழங்கப்படுவது அனைத்து சமயத்தினருக்கும் பொதுவான பயன்பாடு. ஆனால் கிறிஸ்தவ சமயத்தில் ஆலயம் (Church) என்ற பதமே பயன்படுத்தப்படுகிறது.

இந்தியக் கிறித்தவம் வளரத் தொடங்கிய கால கட்டத்தில் ஆலயங்கள் வழிபாட்டுத் தளங்களாக பெருமளவில் கட்டப்பட்டன. அவை வழிபடும் சமூகத்தினரின் பொருளாதார வாழ்வியல் முறைகளுக்கு ஏற்ப சிறியதாகவோ பெரியதாகவோ வடிவமைக்கப்பட்டு புனிதத் தலங்களாக பராமரிக்கப்படுகின்றன.

இந்தியக் கிறித்தவ வரலாற்றில் கி.பி முதலாம் நூற்றாண்டிலேயே இயேசுவின் சீடரான தோமா தமிழகத்தில் சென்னையில் வாழ்ந்து சமயப்பணி செய்ததற்கான வரலாற்று அடையாளங்கள் உள்ளன. முதன் முதலில் சிலுவை வடிவிலான தேவாலயங்கள் (குருசு, Cross) ஆங்காங்கே கட்டப்பட்டிருப்பதை காணமுடிகிறது. இவற்றைப் பற்றின வரலாற்றுக் குறிப்புகளை நிவேதிதா லூயிஸ் தனது அறியப்படாத கிறித்தவம் என்ற நூலில் (பக் 37 - 63) அதிகளவில் தந்திருக்கிறார்.

ஒரு தனிபட்ட நபரோ அல்லது மக்கள் குழுமமோ (அரசன், மடங்கள், கல்லூரிகள், பள்ளிகள்) வழிபடுவதற்கென்றே கட்டப்படும் சிறிய ஆலயங்கள் சிற்றாலயம் (Chapel) அல்லது ஜெபாலயம் என்று வழங்கப்பட்டு வருகிறது. இதில் பொதுமக்கள் வழிபடுவதில்லை.இத்தகைய ஜெபாலயங்களும் இன்று அதிக எண்ணிக்கையில் பெருகி வருகிறது.

ஐரோப்பியர்களின் இந்திய வருகைக்குப் பின்னரே கிறித்தவ தேவாலயங்கள் அதிகளவில் தோற்றம் கண்டிருக்கின்றன. அவை மிகுந்த அழகிய வேலைப்பாடுள்ள தேவாலயங்களாக கட்டப்பட்டன. உயரமான கோபுரங்களுடன் சிலுவையடையாளத்தை முகப்பிலும் ஆலய உச்சியிலும் வைக்கப்பட்டு கட்டப்பட்டிருக்கின்றன. பெரும்பாலும் கிராமப்புறங்களில் இன்றும் தேவாலயங்களின் கோபுர உயரத்திற்கு மேல் மக்கள் தங்கள் வீடுகளைக் கட்டுவதில்லை.

தமிழகத்தில் சீர்திருத்தக் கிறித்தவ வரலாறில் கி.பி 1706 ல் முதன்முதலாக பார்த்தலோமேயு சீகன்பால்க் என்ற ஜெர்மனி நாட்டு ருத்திரன் சபை பாதிரியார் மிஷனெரியாக இந்தியாவிற்கு வந்த பிறகு ஆலயங்களின் எண்ணிக்கை கிடுகிடுவென வளர்ச்சி கண்டது.

சீர்திருத்த கிறித்தவத்தினரின் தேவாலயங்கள் பொதுவாக பக்தர்களின் கூடுகைக்ககாகவும் போதனைகள் பெருவதற்குமான ஓர் இடமாக மட்டுமே பார்க்கப்பட்டது.

ஒவ்வொரு தனிமனிதனும் இறைவன் உறையும் ஆலயம் என்ற (1 கொரிந்தியர் 3:17) விவியக் கருத்தை ஆதாரமாகக் கொண்டு ஆலயங்களின் தூய்மையும் முக்கியத்துவமும் குறையாமல் பார்த்துக் கொள்ளப்பட்ட போதும் ஆங்காங்கே மக்கள் கூடி வழிபட தேவையான ஓர் இடமாக மட்டுமே ஆலயங்கள் மாறினது.இதன் தாக்கம் ஆலயங்கள் வனப்பு மிகுந்த கட்டடங்களுக்கு முக்கியத்துவமளிக்கப்படாமல் சமயப்பணிகளின் தாக்கத்தால் அதிக எண்ணிக்கையில் ஆலயங்கள் பெருக வேண்டும் என்ற இலட்சியமே சமயப்பணியாளர்களிடம் அதிகரித்தது.

18 ஆம் நூற்றாண்டுகளில் கிறித்தவம் ஏற்கப்பட்ட புதிய இடங்களில் கிறித்தவ மிஷனெரிகள் அந்தந்தப் பகுதிவாழ் மக்களின் குடியருப்பு வீடுகளைப் போன்றே கூரை வேய்ந்த சிறிய வீடு போன்ற அமைப்பிலோ அல்லது ஓடுகள் வேயப்பட்ட அமைப்பிலோ ஆலயத்தை அமைத்திருக்கின்றனர். பின்னர் அங்குள்ள மக்களின் சமூகப் பொருளாதார வளர்ச்சி நிலைகளுக்கு ஏற்ப ஆலயங்களைப் பெரிதாக்கி கோபுரங்களோடு அமைத்திருப்பதை வரலாறுகள்

தெரிவிக்கின்றன.

சில ஆலயங்கள் மட்டும் இவற்றிலிருந்து மாறுபட்ட தோற்றமும் வரலாற்றையும் கொண்டிருக்கின்றன.

அவற்றுள் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள டோனாவூரில் ஏமிக்கார்மைக்கேல் என்ற பெண் மிஷனெரி ஏற்படுத்திய கைவிடப்பட்டோர் காப்பகம் ஒன்று ( Dohnavur fellow-ship) உள்ளது. அதில் அந்த அம்மையாரால் கட்டப்பட்ட அழகிய ஆலயம்( ஜெபாலயம்) ஒன்று உள்ளது. அவ்வாலயத்தின் எழில் காண்போரை நின்று பார்த்து இரசிக்க வைக்கும் வகையில் முற்றிலும் மாறுபட்டவகையில் கட்டட அமைப்பு உள்ளது.

இந்த ஆலயம், தமிழகக் கட்டிடக் கலை அமைப்பையுடையதல்ல. இது இன்றும் கேரள மாநிலத்தில் உள்ள பழமையான அழகிய வேலைப்பாடு மிகுந்த அரண்மனைகளின் தோற்ற சாயலில் உள்ளது. இதற்குப் பெருங்காரணம் இந்தக் கட்டிடத்தின் கூரை ஓடுகள் திருவித்தாங்கூர் கட்டிடக் கலைஞர்களால் அங்குள்ள அரண்மனைகளில் பயன்படுத்தப்படும் வடிவமைப்போடு இந்த ஆலயத்திற்கென்றே பிரத்யேகமாகச் செய்யப்பட்டவை என்பதே ஆகும்.

அங்கிருந்தே அவ்வாலயத்திற்குத் தேவையான அனைத்து கூரை ஓடுகளும், தள ஓடுகளும், ஆலய கட்டுமானத்திற்கு தேவையான தேக்கு மரக்கம்புகளும் கொண்டுவரப்பட்டு மிக அழகாக கட்டப்பட்டுள்ளது. அத்தோடு திருவித்தாங்கூர் கட்டிடக் கலைஞர்கள் கட்டிடக்கலைகளை சீனர்களிடமிருந்து கற்றதாகவும் ஏமிக்கார்மைக்கேல் தெரிவிக்கிறார்( Gold cord p- 298 ).

இவ்வாலயத்தின் 'ஆல்ட்டா' என்று சொல்லப்படும் ஆலயத்தின் மிக முக்கியப்பகுதி அழகிய வேலைப்பாடோடு மனங்கவரும் தோற்றமைப்பில் உள்ளது.

மேற்பகுதியில் இரண்டு மாடிகள் உள்ளன. மேல் மாடியில் 18 உலோக வெற்றிட குழாய்களாலான இசைக்கும் மணி ஒன்று உள்ளது. இதனை tubules bell என்கின்றனர். இங்கிலாந்திலிருந்து ஏமிகார்மைக்கேலால் வரவழைக்கப்பட்ட இந்த மணியின் மூலம் இனிய பாடல்களை குறிக்கப்பட்ட வேளைகளில் இசைத்து, காற்றில் மிதக்கவிடுகின்றனர்.

மரச்சுத்தியலால் இலாவகமாக தட்டி ஒலியெழுப்பி விரும்பும் பாடலிசையை தோற்றுவிக்கும் பயிற்சிப் பெற்றோர் அங்கு உள்ளனர். அதன் மூலம் பிறக்கும் இன்னிசை சுற்றுவட்டாரத்தையே ஈர்க்கின்றது. இது அவ்வாலயத்தின் கூடுதல் சிறப்பு. தரைப் பகுதியிலிருந்து இந்த மணி உள்ள மேல் மாடியை ஐம்பது சிறிய படிகட்டுகளைக் கடந்து சென்றே அடைய முடியும் என்பதும் குறிப்பிடத்தக்கது. இந்த ஆலயத்தில் கிறித்தவர்களின் புனிதச் சின்னமான சிலுவைகூட வைக்கப்படவில்லை. இதற்கு, சிலுவையை விக்கிரகமாக கருதி மக்கள் வழிபாடு செய்துவிடக் கூடாது என்பதற்காகவே சிலுவை வடிவத்தை ஏமிக்கார்மைக்கேல் எங்கும் பதிக்கவில்லையாம் (திலகவதிபால், ஏமி கார்மைக்கேல் அம்மையார், ப.246)

இந்த சிறப்பு மிக்க தேவனது ஆலயம் 1924 ஆம் ஆண்டு கட்டத் தொடங்கி 1927 ஆம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டு அதே ஆண்டு நவம்பர் 16 ஆம் நாள் பேராயர் நார்மன் டப்ஸ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது ( மேலது ப- 246).

அழகிய அரண்மனையின் தோற்றப் பொலிவில் அமைந்திருக்கும் இந்த ஆலயம் ஐரோப்பியர்களின் வீட்டு முகப்புகளில் தொற்றி வளரும் பசுஞ்கொடிகள் போன்ற அழகிய கொடிகளால் எப்போதும் நிறம்பியிருப்பது ஆலயத்தின் அழகைப் பேரழகாக்கி வண்ண மலர்களோடு அசைந்தாடி கிடக்கின்றன.

மனதிற்கு அமைதியையும் புத்துணர்ச்சியையும் ஆலயத்தை பார்க்கும் போதே நம்மை நிறைத்து விடுகிறது.



## ஆய்வுகள் தொடர்பாக ...

வரலாற்று ஆய்வுகளை இன்னும் அதிகப்படுத்த திட்டங்கள் உண்டு. உங்கள் பகுதியிலுள்ள வரலாற்று செய்திகளை எழுத விருப்பமுள்ளவர்கள் ஒவ்வொரு மாதமும் கொடுக்கப்படும் தலைப்பின் கீழ் எழுதி அனுப்ப அன்பாடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

உங்கள் கட்டுரைகளை ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்

# தெ.இ.தி கிறிஸ்துநாதர் ஆலயம்










கிறிஸ்துநாதர் ஆலயம், சென்னை 21, தூத்துக்குடி நாசரேத் திருமண்டலத்தைச் சேர்ந்த மெஞ்ஞானபுரம் பரி.பவுல் ஆலயம் போன்று ஒரே ஆண்டில் அதாவது 1847 ல் கட்டப்பட்டு இந்த ஆண்டு 2022 இல் 175 ம் ஆண்டு விழா கொண்டாடினார்கள். மெஞ்ஞானபுரம் ஆலயம் மிகப்பிரமாண்டமாக ஆங்கிலேய Gothic முறைப்படி கட்டப்பட்டுள்ளது. கோபுரம் 192 அடி உயரம் இந்த இரு ஆலயங்களும் C.M.S மிஷனரிகளால் கட்டப்பட்டது. மெஞ்ஞானபுரம் ஆலயம் கனம் ஜாண் தாமஸ் அவர்களாலும், வண்ணாரபேட்டை ஆலயம் கனம் ஜாண் பில்டெர்பக் அவர்களாலும் கட்டப்பட்டது. இதன் நோக்கம் என்னவென்றால் அந்தக்காலத்தில் திருநெல்வேலி பகுதியிலிருந்து இடம் பெயர்ந்து வியாபாரம், தொழிலுக்காக சென்னை வந்து சரியான வசதியில்லாத சூழ்நிலையில் வாழ்ந்த மக்களுக்காக கட்டப்பட்டது. அந்தப்பகுதிக்கு தொளைகாத்து (காதில் துளையிட்டு ஆபரணம் அணிந்த மக்கள்) குடியிருப்பு என்று பெயர். ஆங்கிலத்தில் Tirunelveli settlement என்று பெயர். இந்த ஆலயத்திற்கும் பெயர் C.M.S திருநெல்வேலி செட்டில்மெண்ட் ஆலயம் (CMS-TS) என்று சூட்டப்பட்டது.

சிறிய வளாகத்தில் எட்டுப்பக்கங்கள் கொண்ட ஆலயம் Madras Terrace என்று கூறப்படும் கூரைவேய்ந்த கட்டிடம் நடுவில் எட்டு தூண்கள் தாங்கி நின்றது. ஜன்னல்கள் வைக்கவில்லை. எட்டு பக்கங்களுக்கு பங்கில் தட்டுகள் தொங்கவிடப்பட்டு ஆராதனைகள் மறைவாக நடத்தப்பட்டது.

1970 களில் இந்த பழைய ஆலயம் இடிக்கப்பட்டு நீண்ட சதுர (Rectangle) வடிவமாக கட்டப்பட்டது. இது மேலும் விரிவுபடுத்தப்பட்டு 14 ஜனவரி 2022 இல் 175 ஆண்டு நிறைவு விழா கொண்டாடப்பட்டது. இப்பொழுது சுற்றிலும் யழியிஉலிஜதீகளோடு கட்டப்பட்டு அதிகமான பேர் உட்காரும் வண்டை கட்டப்பட்டுள்ளது.

இந்த ஆலயம் இருக்கும் இடம் அதிக வளம் பெறாத இடம். இங்குள்ள மக்கள் பயன்பெற ஒரு சிறிய பள்ளியும், தையல்பயிற்சி கூடமும் இயங்கி வந்தது. வேலை வாய்ப்புகளைப்பற்றி அறிவிப்பு பலகையில் அறிவிப்புகள் அனைவரும் பயன்பெற தெரிவிக்கப்பட்டது. இப்பொழுதும் பள்ளிக்கூடம் சிறப்பாக நடைபெறுகிறது. இந்த சிறிய வளாகத்தில் ஆலயம், பள்ளிக்கூடம் குருவானவர் இல்லம், மணிகூண்டு Sexton இல்லம், சபை கூடும் மன்றம் (Parish Hall) யாவும் நெருக்கமாக உள்ளது. இந்தப்பகுதி மக்களுக்கு பேருதவியாக உள்ளது. பழைய மிஷனரிகளின் தரிசனம் 'Church Compound' இல் இவை யாவும் இருந்து செயல்படவேண்டும் என்பதே, இப்போது இங்கு 1000க்கு மேற்பட்ட குடும்பத்தார் வந்து இயேசு கிறிஸ்துவை வழிபட்டு பயன்பெற்றுச் செல்கிறார்கள். கனம் மார்டின் பிலிப்பு குருவானவராக பணியாற்றுகிறார்கள்.

1977 ல் (Balcony) பால்கனி கட்ட முயலும் போது இங்குள்ள பொறியாளர்கள் கோவில் அகலம் 40 அடிக்குமேல் இருக்கிறது. கம்பிகட்டி கான்க்ரீட் போட கம்பி நீளம் 36 அடிதான் உள்ளது. நடுவில் தூண் கட்டாயம் எழுப்ப வேண்டும் என்றனர். அப்போது பெசன்ட் நகரில் இருந்த ஒரு கட்டிட நிபுணர் (Structural Engineer) இடம் போய் கேட்டபோது அவர் சொன்னது இருகம்பிகளை இரு நுனியில் வெல்டிங் (welding) செய்து வேண்டிய நீளத்துக்கு (concrete) கான்க்ரீட் கட்டிடமாகக் கட்டலாம் என்றார். அதன்படி செய்து இன்றும் நடுவில் தூண் இல்லாத கான்கிரீட் கட்டிடமாக சிறந்து விளங்குகிறது.

இப்பொழுது இங்கு வியாபாரத்தில் பெரியவர்கள், சிறுவியாபாரிகள் மற்றும் அலுவலக வேலை செய்பவர் யாவரும் பயன்பெறுகிறார்கள். சபையினரே சபை முன்னேற்றத்துக்கு வேண்டியதைச் செய்து கொள்கிறார்கள். திரு. D.மைக்கேல் செயலராக இருந்து திறம்பட செயல்படுகிறார் வளர்க இந்த சபை.

திரு கிருபாகரன் சாமுவேல்
சென்னை

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்ப்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்ப்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்றா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1500 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுள்ளங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

**Bank : Federal Bank**
**Name : Tinnevelly Christian Historical Society**
**A/c Number : 1748 0200 0036 84**
**IFSC Code : FDRL0001748**

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**

**christianhistoricalsociety.in/**
**tchsportal.co.in**

## நூல் அறிமுகம்

# அறியப்படாத கிறிஸ்தவம்




கடந்த 2022 மார்ச் 24 அன்று பாளையங்கோட்டை பெருமாள்புரம் VBS மார்கன் அரங்கத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. ஓய்வு பெற்ற பேராசிரியரும் தமிழ் எழுத்தாளரும் மற்றும் தமிழ்நாடு - புதுச்சேரி மாநிலங்களுக்கான கத்தோலிக்கப் பேரவைச் செயலாளருமான பேரா. திரு.பா.வளன் அரசு அவர்கள் நூலாசிரியர் சகோதரி.நிவேதிதா லூயிஸ் அவர்களிடம் முதல் பிரதியைப் பெற்று நூல் குறித்து சிறப்புரையாற்றி நூலை வெளியிட்டார்கள். கழி(ளி) யல் - ஆட்டக்கலை - தமிழ் சுவடிகள் - பேராசிரியர்.முனைவர். திரு.வே.கட்டளை கைலாசம் ஐயா அவர்கள் தமிழக பெண் கல்வெட்டு ஆய்வாளரும் கல்வெட்டியல் உயர் அலுவலருமான திருமதி.மார்க்சி காந்தி ஆகிய இருவரும் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டார்கள் இருவரும் சிறப்பான உரையாற்றினார்கள். முனைவர் திருமதி ஜான்சி பால்ராஜ், பேராசிரியர் சுரேஷ் சாலமோன், அருள்திரு கிப்சன் ஜான் தாஸ், ஆசிரியர் திரு.கிறிஸ்து ஞானவள்ளுவன், திரு.சுரேஷ் காணி, சகோதரி ரோடா அலெக்ஸ் ஆகியோரும் சிறப்புரையாற்றினார்கள். திரு.மைக்கேல் ஆரம்ப ஜெபமும் நிகழ்ச்சிகளை திரு.வில்பர்ட் தொகுத்து வழங்கினார்கள்.

இந்நிகழ்ச்சிக்கு சிறப்பான ஏற்பாடுகளை செய்த அருட்பணியாளர்கள் அருள்திரு. ஜேசு விக்டர் மற்றும் அருள்திரு. ஜான் சாமுவேல் மற்றும் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்க உறுப்பினர் திரு.மன்னா செல்வகுமார் ஆகியோர் இணைந்து சிறப்பாக செய்திருந்தனர்.




# கிறிஸ்தவ கீர்த்தனைகள், ஆய்வு நூல்



மதுரை மார்ச் 17 மதுரை அரசரடியிலுள்ள தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் கிறிஸ்தவ கீர்த்தனைகள், ஆய்வு நூல் லூத்தரன் திருச்சபை பேராயர் டேனியல் ஜெயராஜ், நூலை வெளியிட மதுரை மாநகராட்சி துணை மேயர் நாகராஜன் நூலை பெற்றுக்கொண்டார். எக்சோடஸ் திருப்பணிகள் இயக்குனர் விக்டர் எழுதிய பல்நோக்கு பார்வையில் கிறிஸ்தவ கீர்த்தனைகள் ஆய்வு நூல் வெளியீட்டு விழா நடந்தது. தமிழ்நாடு இறையியல் கல்லூரியின் முதல்வர் மார்க்ரெட் கலைச்செல்வி, தலைமையில் தமிழ் சுவிசேஷ லூத்தரன் திருச்சபை பேராயர் டேனியல் ஜெயராஜ், நூலை வெளியிட மதுரை மாநகராட்சி துணை மேயர் நாகராஜன் நூலை பெற்றுக்கொண்டு சிறப்புரை ஆற்றினர். சென்னை கிறிஸ்தவக் கல்லூரியின் முன்னாள் தமிழ்த்துறை தலைவர் பேராசிரியர் முனைவர் மோசஸ் மைக்கேல் பாரடேயும் மதுரை இலக்கிய பேரவை தலைவர் நகைச்சுவை பேரரசு சண்முக திருக்குமரனும் நூலை பற்றி அறிமுக உரை ஆற்றினர். வாழ்த்துரை போதகர் டேவிஸ் அவர்கள் வழங்கினார்கள் இன்னும் தமிழறிஞர்கள் சமய தலைவர்கள் மற்றும் நம்முடைய வரலாற்றுச் சங்க உறுப்பினர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

மதுரை மாநகராட்சியின் துணை மேயர் நாகராஜன் கூறும் போது இந்த கீர்த்தனைகள் குறித்த ஆய்வு நூல் கீர்த்தனைகள் குறித்த ஆய்வு நூலாக மட்டும் அமையாமல் தமிழிசை வரலாறு இசைக்கருவிகளின் வரலாறு இந்திய சுதந்திர போராட்ட வரலாற்றில் கீர்த்தனைகளின் பங்களிப்பு சாதிய விடுதலை வரி மற்றும் அடிமைமுறை வர்ணாசிரம வழிவந்த உடை தோற்ற அடையாளம் தோமா வழி கிறிஸ்தவம் தமிழ் இலக்கிய வரலாறு பக்தி இலக்கிய வரலாறு ஐரோப்பிய இசை வரலாறு கீர்த்தனை ஆசிரியர்களின் பட்டியல் அவர்தம் வரலாறு போன்ற பல செய்திகள் இடம் பெற்று இருக்கின்றன என்றார்.





# பேணுதல் தேவை - சரியான வழிமுறையில் !

1923 முதல் 1928 வரை நெல்லை அத்தியக்ஷராக மகாகனம் N. H. டப்ஸ் அவர்கள் பனிப்புரிந்துள்ளார். அக்காலத்தில் அவர் சொன்னது - திருநெல்வேலி சபை **'ஆலயம் கட்டும் சபை'** - ஏனென்றால் அவர் இருந்த 5 ஆண்டு காலத்தில் மட்டுமே 71 ஆலயங்களை பிரதிஷ்டை செய்துள்ளார்.

100 ஆண்டுகள் ஓடிவிட்டன -இப்போது தமிழ்நாடு எங்குமே மிஷனரிகள் காலத்தில் கட்டப்பட்ட தேவாலயங்கள் பல செப்பனிப்புத் தேவைகள், விரிவாக்கத் தேவைகளை உணர்ந்த வண்ணம் உள்ளன. இக்காலகட்டத்தில் **'ஆலயம் செப்பனிடும் சபை'** என்றே கூறலாமோ!.

இவ்வாலயங்கள் கட்டப்பட்ட காலத்தில் இருந்த கட்டிட கலைக்கும் இப்போது நிலவும் முறைகளுக்கும் ஏணி வைத்தால் கூட எட்டமுடியாத அளவிற்கு மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. ஆனால் உலகம் முழுவதும் தொன்மையான கட்டிடங்களை பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் உருவாகியுள்ளது மேல் நாடுகளின் இதற்கென பல தொழில்நுட்பங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இந்தியாவில் இருக்கும் லட்சக்கணக்கான தொல் கட்டிடங்களை பாதுகாக்க இப்பிரிவு அன்மை காலங்களில் அதிகமாக செயல்பட தொடங்கியுள்ளது. இதை பாதுகாப்பு கட்டிடகலை (Conservation Architecture) என்று கூறுகின்றனர். இதற்கான உயர் படிப்பும் இப்போது கட்டிடக்கலை கல்லூரிகளில் உள்ளது. பெரும் சவாலான துறை என்றே சொல்லவேண்டும். ஒரு பழமையான கட்டிடம் உருவாகின காலத்தில் இருந்திருக்கும் மனல், செங்கல், கூரை, மரம், சுன்னாம்பு, தண்ணீர், சுதை, களிமன், பூசுவேலை பொருட்களின் தரம் இப்போது முற்றிலும் மாறிவிட்டன. பழைய கட்டிடங்களை இக்காலத்து சிமென்ட் முதலிய கட்டுமான முறைகளை வைத்து செப்பனிடும்போது அவை ஒட்டுவேலை போல அமைகிறது. மட்டுமல்லாமல் அவை கட்டிடத்தை மேலும் பாதிக்கின்றன என்றும் சொல்லலாம்.

100 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட ஆலயங்கள், பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள், விடுதிகள், ஆயர் இல்லங்கள் அனைத்தின் தரம் அபாரமானது. இப்போது கட்டப்படும் கட்டிடங்களின் உயிர்ப்பே 30 ஆண்டுகள் மட்டுமே என்று நிபுனர்கள் சொல்கின்றனர். பழைய கட்டிடங்களை சரியான பாதுகாப்பு கட்டிடக்கலை வழியாக செப்பனிட்டால் இன்னும் பல நூற்றாண்டுகள் அவை இலங்க வழியுண்டு. அதுமட்டுமல்ல இதுகாறும் அவை சமுதாயத்திற்கு அளித்த கிறிஸ்தவ தொண்டின் பாரம்பரியத்தையும் எடுத்துரைக்கும் ஞாபகச்சின்னஙகளாக அமைகின்றன.

சென்னையில் இந்த காரணங்களை உணர்ந்த கத்தோலிக்க திருச்சபை, ஓர் பாரம்பரிய கட்டுமானங்கள் பாதுகாப்பு குழு ஒன்றை அன்மையில் அமைத்துள்ளது. புதுமைப்படுத்தல், விரிவாக்கம் செய்தல், செப்பனிடுதல் போன்றவை தேவைப்படும் போது இந்த குழு சரியான வழிகாட்டல் கொடுக்க முயற்ச்சிக்கின்றது. நமது தமிழ்நாட்டு அரசே இப்பணிகளுக்கு நிதி ஒதுக்கியிருப்பது கடந்த வாரங்களில் வெளிவந்த தகவல்.

கட்டிடங்கள் இல்லாமல் வேய்ந்த குடிசைகளில் தான் நாம் முதலில் ஆண்டவரைத் தொழுது பற்றிக்கொண்டோம். பலரின் உதாரத்துவமான காணிக்கைகளாலும் தியாகத்தாலும் உழைப்பாலும் கட்டிடங்கள் உயர்ந்தன. சமுதாயத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தின. மாற்றத்தின் சின்னங்களாகவும், இன்னும் நாம் செய்யவேண்டிய சேவைகள் அதிகம் என்று நமக்கு ஊக்கமளிக்கும் மையங்களாகவும் இப்பழங்கட்டிடங்கள் உள்ளன. இவற்றை நாம் சரியாக பேணுதல் வேண்டும். வசதி, புதுமை, தொழில்நுட்பம் ஆகியன தேவைதான் இவற்றை சமநிலையோடு அனுகவேண்டும்.

இளம் தலைமுறையினரை ஊக்குவிக்கும் வண்ணம் இக்கட்டிடங்களின் வேலைப்பாடுகள், வரலாறு மற்றும் சேவை, பேனும் விதம் ஆகியனவற்றை புரிந்துக்கொள்ளும்படி சுற்றுலா பயனங்கள் ஏற்பாடு செய்யலாம்.

நன்றாக பராமரிக்கப்பட்ட, பேணப்படுகின்ற, இன்றளவும் சிறப்பாக பயன்படுத்தபடுகின்ற கட்டிடங்களையும் காணுதல் அவசியம். திருச்சபை நிர்வாகங்கள் பாதுகாப்பு கட்டிடகலை குழுக்களை அமைத்து அடுத்த 50 ஆண்டுகளுக்கான எதிர்நோக்கோடு ஜெபத்தோடு இக்காரியங்களை கையில் எடுக்கும் கட்டாயத்தில் இருக்கின்றன. ஆண்டவர் நமக்கு கொடுத்த இந்த வகையான பொக்கீஷங்களை சரியாக பேணும் பொறுப்பு நம் ஒவ்வொருக்கும் உண்டு.

சிந்திப்போம் செயல்படுவோம்.

**ரோடா அலெக்ஸ், சென்னை**

# பரி . பவுலின் ஆலயம் மெய்ஞ்ஞானபுரம்

1. மெய்ஞ்ஞானபுரம் பரி. பவுலின் ஆலயம் இருக்குமிடத்தில் 1830 - ம் ஆண்டு ஒரு குலதெய்வக் கோவில் இருந்தது.
2. மலையாள தேசத்திலிருந்து திருச்செந்தூர் செல்லும் யாத்திரிகர் அங்கு தங்கி, தொழுது போவது வழக்கம். மெய்ஞ்ஞானபுரத்திற்கு முதல் முதலாக வழங்கிவந்த பெயர் நெடுவிளை இப்பகுதியில் கிறிஸ்தவத்தை வேரூன்றிய பெருமை ரேனியஸ் ஐயரைச் சேரும்.
3. மூர்த்தி, வில்லி, பண்டாரம், மாலைசூடி, குப்பையாண்டி, என்ற ஐந்து பூர்வ குடும்பங்களைகொண்ட நெடுவிளையை ரேனிஸ் ஐயர் அடிக்கடி சந்தித்து, அவர்களைக் கிறிஸ்தவர்களாக்கி, அவர்களது குலதெய்வக் கோவிலை அகற்றி, அதே இடத்தில் ஒரு ஆலயத்தைக் கட்டினார்.
4. 1837ல் தென் திருநெல்வேலியின் அப்போஸ்தலன் என்று அழைக்கப்பட்ட கனம் ஜாண் தாமஸ் இங்கிலாந்திலிருந்து இங்கு வந்தார்.
5. மெய்ஞ்ஞானபுரம் சபையைக் கட்டியதுமல்லாமல், தென்னிந்தியாவிலே அழகானதும், உயர்ந்ததும் விசாலமானதுமான கிறிஸ்தவ ஆலயத்தையும் கட்டினார்.
6. மெய்ஞ்ஞானபுரத்திலிருது 4 மைல் மேற்கேயுள்ள பன்னம்பாறை என்ற ஊரிலுள்ள கல்தச்சர் அங்குள்ள கற்களாலேயே இக்கோவிலைக் கட்டினார்கள்.
7. கட்டடம் உறுதிபெற முட்டை, பதனீர், கருப்புக்கட்டி, கடுக்காய் முதலியவற்றைச் சாந்துடன் சேர்த்துக் கட்டினர்.
8. இக்கோவிலுக்கு ஏழு அடுக்குகள் உண்டு, கோவில் மணி மிகவும் தெளிவான சப்தம் கொடுக்கக்கூடியது. ஏறக்குறைய ஒருமைல் தூரம் இதன் ஒலி எட்டும்.
9. எட்டடி உயரமுள்ள மகுடக் கல்லின் மீது மிகவும் சக்தி வாய்ந்த இடிதாங்கி பொறுத்தப்பட்டுள்ளது.
10. கனம் ஜாண் தாமஸ் இவ்வாலயத்தை **'ஒரு ரூபாய் ஆலயம்'** - என்று வேடிக்கையாய்ச் சொன்னாராம்.
11. ஒரு ரூபாய் 192 பைசா கொண்டதுபோல இவ்வாலயம் 192 உயரம் கொண்டதாம் .
12. 1844 - ம் வருஷம் ஜீன் 20 - ம் தேதி சென்னை C. M. S. காரியதரிசி J . டக்கர் ஐயரால் அஸ்திபாரம் போடப்பட்டது.
13. 1847 - ம் வருடம் டிசம்பர் 29 - ம் தேதி கனம் ஜாண் தாமஸ் ஐயரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.
14. 1868 - ல் கோபுர வேலை முடிந்து அக்டோபர் மாதம் 9 - ம் தேதி நேப்பியர் பிரபுவால் மகுடக்கல் வைக்கப்பட்டது.
15. 1855 ஜனவரியில் மேற்கோப்பு வேலை முடிந்தது.
16. 1937 டிசம்பர் 21 ல் ஸ்ரீ ஜாண் தாமஸ் ஐயர் வந்ததை நினைத்து நூற்றாண்டு கொண்டாடப்பட்டது.
17. 1947 டிசம்பர் 20 - ல் ஆலய நூற்றாண்டு விழா நடைபெற்றது.
18. 1943 ல் ரூ . 14000 செலவில் தென்பக்கத்துக் கூரை மாத்திரம் புதிப்பிக்கப்பட்டது.
19. 1955 டிசம்பர் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டது.
20. சபையார் அனைவரும் தரையில் அமர்ந்தே வணக்கம் செலுத்துவர்.
21. 'இங்கிலாந்திலிருந்து வந்த துரைமகனார் எத்தனையோ ஆலயம் சென்று வழிபட்டேன். இவ்வாலயத்தினுள் தேவனின் பிரசன்னம் இருப்பதாக உணருகிறேன்,' என்றாராம்!
22. எத்தனையோ பக்திமான்களையும், குருக்களையும் இவ்வாலயம் உண்டுபண்ணினது. அதில் தலை சிறந்தவர் 'பிஷப் அசரியா'.



# ஊசிக்கோபுர பெயர் வரலாறு

ஊசிக் கோபுர பாளை மாநகர் சங்கப் புலவர்கள் சங்கமித்திருந்த மங்கலப் பாண்டி வளநாட்டில் சந்தனப் பொதியச் செந்தமிழ்ச் சோலையாம் நெல்லை யம்பதியில் - பாரெலாம் புகழும் பட்டணம் பாளையங்கோட்டை, கிழக்கிந்தியக் கம்பெனியாரின் தலைமைத்தலம். இதன் பழம்பெரும் பெயர் பாளையம், பட்டாளம் அல்லது படை என்று பொருள், கோட்டை கட்டிப்படை வைத்துப் பாதுகாத்த நகர் பாளையங்கோட்டை. (கி.பி.1776) இன்றும் இடிந்து பட்ட அதன் பழங்கோட்டைகளைக் காணலாம். **"தெற்கு பஜாரை கோட்டை கடை பஜார்"** என்று மக்கள் சொல்வது இப்பொழுதும் வழக்கில் உள்ளது. இ.பி.தாமஸ் என்பவர் மாவட்ட ஆளுநராக இருந்த காலத்தில் (1840) பாளையம்பதியின் கோட்டைச் சுவர் கற்களை பொதுமக்கள் உபயோகித்துக் கொள்ள உத்தரவிட்டார். நெல்லைத் திருமண்டில அச்சுக்கூடத்தில் கூட அக்கற்களை இன்றும் காணலாம். மேலை நாட்டு கத்தோலிக்க குருமாரும் - சீர்திருத்த திருச்சபை அருளாளர்களும் சேர்ந்து இந்நகரைக் கல்விக் களஞ்சியமாக்கினர். சீர்திருத்தத் திருச்சபையினர். 1870 ஆம் ஆண்டிலேயே தூய யோவான் உயர்நிலைப்பள்ளியை உருவாக்கி 1878 ல் அதைக் கல்லூரியாக்கினர். நூறு ஆண்டுகளுக்கு முன்பே கல்லூரி கண்ட நன்னநகர் பாளைநகர். அதன் அழகுக்கு மேலும் மேலும் அழகூட்டுவது மேற்கே நிமிர்ந்து நிற்கும் ஊசிக்கோபுரமாகும்.

பாளை - நெல்லை முக்கிய பாதையில் அமைந்த இவ்வழகு ஆலயம் 1826 ஜனவரி மூன்றாம் நாள் கால்கோள் நாட்டப்பட்டது. இவ்வாலயத்தைக் கட்டிய ரேனியஸ்- ஐயர் அதற்குப் பெயர் வைக்கவில்லை. 1835 ஆம் ஆண்டில் அவர் விலகிக் கொண்ட போது, சென்னை முதல் பேராயர் காரி என்பார் நெல்லை 1836 ல் முதன் முறையாக நெல்லை வந்தார். அப்பொழுது, தேவசகாயம் ஐயருக்கு முழுப்பட்ட ஆராதனை நடந்து முடிந்தது. குறிப்பு நோட்டில் கையெழுத்திடும் பொழுது ஆலயத்தின் பெயர் என்ன என்று கேட்டார். ரேனியஸ் ஐயருக்குப் பின் பொறுப்பேற்றிருந்த பெற்றிப் ஐயர் ஆலயத்திற்குப் பெயர் இன்றும் இல்லை என்றார். உடனே பேராயர் காரி **"பரிசுத்த திரித்துவ ஆலயம்"** என்று பேரிட்டார். நூறு ஆண்டுகளுக்குப் பின்பு 1940 ஆம் ஆண்டில் பேராயர் ஸ்தேவான் நீல் என்ற பேரறிஞர் காலத்தில் **'அத்தியட்சர் ஆலயம்'** என்ற பெயர் பெற்றது.

பரி . திரித்துவ அத்தியட்சாலயம் என்று சபை மக்களாலும், ஊசிக்கோபுரம் என்று ஊரிலுள்ள அனைத்து மக்களாலும் இன்றும் அருமையாக அழைக்கப்பட்டு வருகிறது. 1967 ஆம் ஆண்டில் இவ்வழகு ஆலயம் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. 1998 ஆம் ஆண்டு மாபெரும் விரிவாக்கம் செய்யப்பட்டு ஆராதனை நடந்தது. ஆசியாக் கண்டத்திலேயே மிகப் பெரிய ஆலயங்களுள் ஒன்றாக ஜொலிக்கின்றது.



கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழை தமிழ் வரலாற்று அறிஞர்களை சந்தித்து கொடுத்த பொழுது எடுத்த படங்கள்


சுரண்டை கோமதி பழனி சாமி அவர்களிடம் நமது மாத இதழை கொடுத்த பொழுது



பேராசிரியர் திரு சுரேஷ் சாலோமோன் அவர்களுடன்


பேராசிரியர் திவான் அவர்களிடம் இதழை கொடுத்த பொழுது



திரு மயன் ரமேஷ் ராஜா அவர்களுக்கு நமது இதழை கொடுத்த பொழுது



வரலாற்றுச் சங்க உறுப்பினர்களுக்கு இதழை கொடுத்த பொழுது



வரலாற்றுச் சங்க உறுப்பினர்களுக்கு இதழை கொடுத்த பொழுது


வரலாற்றுச் சங்க உறுப்பினர்களுக்கு இதழை கொடுத்த பொழுது


வரலாற்றுச் சங்க உறுப்பினர்களுக்கு இதழை கொடுத்த பொழுது

# வேத ஆராய்ச்சி

முறையான வேதாகம கல்வி தொலைக்காட்சியில்

உமது வேதத்திலுள்ள
அதிசயங்களை
நான் பார்க்கும்படிக்கு,
என் கண்களைத் திறந்தருளும்.

சங்கீதம் 119:18

QUALITY
1293
பாடங்கள்
QUALITY

# ஆதியாகமம் முதல்
# வெளிப்படுத்தல் வரை

தொலைக்காட்சியில் www.Radio882.com

திங்கள் முதல் வெள்ளி

நம்பிக்கை டிவி
6:00 AM & 4:00 PM

SunTV #611 Airtel #817
DishTV #578 TataSky #1592
Reliance BigTV #660 SCV #362
Arasu #600 TCCL #743

ஜாய் டிவி தினமும்
6:30 AM & 7:30 PM

TCCL #726 GTPL #50
VK Digital #716 JAK #985

நிஜம் டிவி
4:00 PM திங்கள் முதல் வெள்ளி
9:30 PM ஞாயிறு முதல் வியாழன்

TCCL #733 SCV #180
AMN #196 Aristo #626
GTPL #113 GTPL #113
STAR Canada TV #626

Cable TV in Kanyakumari, Tirunelveli & Tenkasi District
JAK, Digital, TACTV

மேலும் விபரங்களுக்கு +91 44 49081234 +91 44 49081233

**Return Requested:**

CHRISTAVA VARALATRU SUVADUGAL
# 2.2.3(4)North Street,
Bungalow Surandai-627859.
Tenkasi District
Tamil Nadu
Ph: 04633 290401

**To**

Tamil Printed Book- For Private Cirulation Only

Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401